த்வதீய புக்தோஜ்ஜித ஶேஷ போஜிநா த்வயா நிஸ்ருஷ்டாத்ம பரேண யத்யதா |
ப்ரியேண ஸேநாபதிநா ந்யவேதி தத் ததாநுஜாநந்தம் தமுதார வீக்ஷணை: || 42

ஹதாகில க்லேச மலைஸ் ஸ்வபாவத: ஸதாநுகூல்யைக ரஸைஸ் தவோசிதை: |
க்ருஹீத தத் தத் பரிசார ஸாதநை: நிஷேவ்யமாணம் ஸசிவைர் யதோசிதம் || 43

அபூர்வ நாநா ரஸ பாவ நிர்ப்பர ப்ரபுத்தயா முக்த விதக்த லீலயா |
க்ஷணாணுவத் க்ஷிப்த பராதிகாலயா ப்ரஹர்ஷயந்தம் மஹிஷீம் மஹா புஜம் || 44

அசிந்த்ய திவ்யாத்புத நித்யயௌவந ஸ்வபாவ லாவண்ய மயாம்ருதோததிம் |
ஶ்ரிய: ஶ்ரியம் பக்த ஜநைக ஜீவிதம் ஸமர்த்தம் ஆபத்ஸகம் அர்த்தி கல்பகம் || 45

பவந்த மேவா நுசரந் நிரந்தரம் ப்ரஶாந்த நிஶ்ஶேஷ மநோரதாந்தர: |
கதாஹ மைகாந்திக நித்ய கிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாத ஜீவிதம் || 46

திகஶுசி மவிநீதம் நிர்த்தயம் மாமலஜ்ஜம் பரமபுருஷ யோஹம் யோகிவர்யாக்ர கண்யை: |
விதிசிவ ஸநகாத்யை: த்யாது மத்யந்த தூரம் தவ பரிஜந பாவம் காமயே காம வ்ருத்த: || 47

அபராத ஸஹஸ்ர பாஜநம் பதிதம் பீம பவார்ண வோதரே |
அகதிம் ஶரணாகதம் ஹரே க்ருபயா கேவல மாத்ம ஸாத் குரு || 48



அவிவேக கநாந்த திங்முகே பஹுதா ஸந்தத து:க்க வர்ஷிணி |
பகவந் பவ துர்த்திநே பத: ஸ்கலிதம் மாமவலோகய அச்யுத || 49

நம்ருஷா பரமார்த்தமேவ மே ச்ருணு விஜ்ஞாபந மேக மக்ரத: |
யதி மே ந தயிஷ்யஸே தத: தயநீயஸ் தவ நாத துர்லப: || 50

ததஹம் த்வத்ருதே ந நாதவாந் மத்ருதே த்வம் தயநீயவாந் நச |
விதி நிர்மிதம் ஏததந்வயம் பகவந் பாலய மாஸ்ம ஜீஹப: || 51

வபுராதிஷு யோபி கோபிவா குணதோஸாநி யதா ததா வித: |
ததஹம் தவ பாத பத்மயோ: அஹமத்யைவ மயா ஸமர்ப்பித: || 52

மம நாத யதஸ்தி யோஸ்ம்யஹம் ஸகலம் தத்தி தவைவ மாதவ |
நியத ஸ்வமிதிப்ரபுத்ததீ: அதவா கிந்நு ஸமர்ப்பயாமி தே || 53

அவபோதிதவாந் இமாம் யதா மயி நித்யாம் பவதீயதாம் ஸ்வயம் |
க்ருபயைததநந்ய போக்யதாம் பகவந் பக்திமபி ப்ரயச்ச மே || 54

தவ தாஸ்ய ஸுகைக ஸங்கிநாம் பவநேஷ்வஸ்த்வபி கீட ஜந்ம மே |
இதரா வஸதேஷு மாஸ்மபூத் அபி மே ஜந்ம சதுர்முகாத்மநா || 55

सकृत्त्वदाकारविलोकनाशया तृणीकृतानुत्तम भुक्तिमुक्तिभिः ।
महात्मभिर्मा मवलोक्यतां नय क्षणेऽपि ते यद्विरहोऽतिदुस्सहः ॥ ५६ ॥

नदेहं न प्राणान्न च सुखमशेषाभिलषितं नचात्मानं नान्यत्किमपि तव शेषत्वविभवात् ।
बहिर्भूतं नाथ! क्षणमपि सहे यातु शतधा विनाशं तत्सत्यं मधुमथन! विज्ञापनमिदम् ॥ ५७ ॥

दुरन्तस्या नादेरपरिहरणीयस्य महतो निहीनाचारोऽहं नृपशुरशुभस्या स्पदमपि ।
दयासिन्धो! बन्धो! निरवधिक वात्सल्य जलधे! तव स्मारं स्मारं गुणगण मितीच्छामि गतभीः ॥ ५८ ॥

अनिच्छन्नप्येवं यदि पुनरितीच्छन्निव रजस्तमश्छन्नश्छद्मस्तुतिवचनभङ्गीमरचयम् ।
तथापीत्थं रूपं वचनवलम्ब्यापि कृपया त्वमेवैवं भूतं धरणिधर! मे शिक्षयमनः ॥ ५९ ॥

पिता त्वं माता त्वं दयिततनयस्त्वं प्रियसुहृत् त्वमेव त्वं मित्रं गुरुरसि गतिश्चासि जगताम् ।
त्वदीयस्त्वद्भृत्यस्तव परिजनस्त्वद्गतिरहं प्रपन्नश्चैवं सत्यमहमपि तवैवास्मि हि भरः ॥ ६० ॥

जनित्वाऽहं वंशे महति जगति ख्यातयशसां शुचीनां युक्तानां गुणपुरुषतत्त्वस्थितिविदाम् ।
निसर्गादेव त्वच्चरणकमलैकान्त मनसां अधोधः पापात्मा शरणद! निमज्जामि तमसि ॥ ६१ ॥

अमर्यादः क्षुद्रश्चलमति रसूयाप्रसवभूः कृतघ्नो दुर्मानी स्मरपरवशो वञ्चनपरः ।
नृशंसः पापिष्टः कथमहमितो दुःखजलधेः अपारादुत्तीर्णस्तव परिचरेयं चरणयोः ॥ ६२ ॥

रघुवर! यदभूस्त्वं तादृशो वायसस्य प्रणत इति दयालुर्यच्च चैद्यस्य कृष्ण! ।
प्रतिभव मपराद्धुर्मुग्ध! सायुज्यदोभूः वद किमदमागस्तस्य तेऽस्ति क्षमायाः ॥ ६३ ॥

ननु प्रपन्नस्सकृदेव नाथ! तवाहमस्मीति च याचमानः ।
तवानुकम्प्यः स्मरतः प्रतिज्ञां मदेकवर्जं किमिदं व्रतं ते ॥ ६४ ॥

अकृत्रिमत्वच्चरणारविन्द प्रेमप्रकर्षावधि मात्मवन्तम् ।
पितामहं नाथमुनिं विलोक्य प्रसीद मद्वृत्तमचिन्तयित्वा ॥ ६५ ॥

---

यत्पदाम्भोरुह ध्यानविध्वस्ताशेषकल्मषः ।
वस्तुतामुपयातोऽहं यामुनेयं नमामि तम् ॥

॥ इति स्तोत्ररत्न समाप्तम् ॥

---

ஸக்ருத் த்வதாகார விலோக நாஶயா த்ருணீக்ருதாநுத்தம புக்தி முக்திபி: |
மஹாத்மபிர் மாம் அவலோக்யதாம் நய க்ஷணேபி தே யத் விரஹோ அதிதுஸ்ஸஹ: || 56

நதேஹம் நப்ராணாந் நச ஸுகம் அசேஷாபிலஷிதம்
நசாத்மாநம் நாந்யத் கிமபி தவ சேஷத்வ விபவாத் |
பஹிர்பூதம் நாத க்ஷணமபி ஸஹேயாது சததா
விநாஶம் தத்ஸத்யம் மதுமதந விஜ்ஞாபனமிதம் || 57

துரந்தஸ்யா நாதே ரபரிஹரணீயஸ்ய மஹத:
நிஹீநா சாரோஹம் ந்ருபசுர் அசுபஸ்யாஸ்பதமபி |
தயாஸிந்தோ பந்தோ நிரவதிக வாத்ஸல்ய ஜலதே
தவ ஸ்மாரம் ஸ்மாரம் குணகண மிதீச்சாமி கதபீ: || 58

அநிச்சந்நப்யேவம் யதிபுநரிதீச்சந் நிவ ரஜ:
தமச்சந்நச் சத்மஸ்துதி வசந பங்கீமரசயம் |
ததாபீத்தம் ரூபம் வசந மவலம்ப்யாபி க்ருபயா
த்வமேவைவம் பூதம் தரணிதர மே சிக்ஷய மந: | 59

பிதாத்வம் மாதாத்வம் தயித தநயஸ்த்வம் ப்ரியஸுஹ்ருத் த்வமேவ
த்வம் மித்ரம் குருரஸி கதிஶ்சாஸி ஜகதாம் |
த்வதீய: த்வத்ப்ருத்ய: தவ பரிஜந: த்வத்கதிரஹம்
ப்ரபந்நஶ்சைவம் ஸத்யஹமபி தவைவாஸ்மிஹி பர: || 60

ஜநித்வாஹம் வம்சே மஹதி ஜகதி க்யாத யசஸாம்
சுசீநாம் யுக்தாநாம் குணபுருஷ தத்வஸ்திதி விதாம் |
நிஸர்க்காதேவ த்வச்சரண கமலைகாந்த மநஸாம்
அதோத: பாபாத்மா சரணத நிமஜ்ஜாமி தமஸி. || 61

அமர்யாத: க்ஷுத்ரஶ் சலமதி ரஸூயாப்ரஸவபூ:
க்ருதக்நோ துர்மாநீ ஸ்மரபரவசோ வஞ்சநபர: ந்ருசம்ஸ: பாபிஷ்ட: |
கதமஹமிதோ துக்க ஜலதே:
அபாராதுத்தீர்ணஸ்தவ பரிசரேயம் சரணயோ: || 62

ரகுவர யதபூஸ்த்வம் தாத்ருசோ வாயஸஸ்ய
ப்ரணத இதி தயாளு: யச்ச சைத்யஸ்ய க்ருஷ்ண ! |
ப்ரதிபவ மபராத்துர்முக்த ஸாயுஜ்யதோபூ:
வத கிமபதமாக: தஸ்ய தேஸ்தி க்ஷமாயா: || 63

நநு ப்ரபந்நஸ்ஸக்ருதேவ நாத தவாஹமஸ்மீதி ச யாசமாந: |
தவாநுகம்ப்ய: ஸ்மரத: ப்ரதிஜ்ஞாம் மதேக வர்ஜம் கிமிதம் வ்ரதந்தே || 64

அக்ருத்ரிம த்வச் சரணாரவிந்த ப்ரேம ப்ரகர்ஷாவதிம் ஆத்மவந்தம் |
பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய ப்ரஸீத மத்வ்ருத்த மசிந்தயித்வா || 65

---

யத் பதாம்போருஹ த்யாந வித்வஸ்த அசேஷ கல்மஷ: |
வஸ்துதா முபயாதோஹம் யாமுநேயம் நமாமிதம் ||

(ஸ்தோத்ர ரத்நம் ஸமாப்தம்)

---

|| श्रीः ||

|| श्रीमते रामानुजाय नमः ||

# || धाटीपञ्चकम् ||

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# தா டீ ப ஞ் ச க ம்

पाषण्डद्रुमषण्ड दावदहनः चार्वाकशैलाशनिः बौद्धध्वान्तनिरासवासरपतिः जैनेभ कण्ठीरवः ।
मायावादि भुजङ्गभङ्गगरुडः त्रैविद्यचूडामणिः श्रीरङ्गेशजयध्वजो विजयते रामानुजोऽयं मुनिः ॥ १ ॥

பாஷண்ட த்ருமஷண்ட தாவதஹந: சார்வாக ஶைலாஶநி:
பௌத்தத்வாந்தநிராஸவாஸரபதி: ஜைநேபகண்டீரவ: |
மாயாவாதி புஜங்கபங்ககருட: த்ரைவித்யசூடாமணி:
ஸ்ரீரங்கேச ஜயத்வஜோ விஜயதே ராமாநுஜோऽயம் முநி: || 1 ||

पाषाण्डषण्डगिरि खण्डनवज्रदण्डाः प्रच्छन्नबौद्धमकरालयमन्थ दण्डाः ।
वेदान्तसार सुखदर्शनदीपदण्डाः रामानुजस्य विलसन्ति मुनेस्त्रिदण्डाः ॥ २ ॥

பாஷண்டஷண்டகிரிகண்டந வஜ்ரதண்டா: ப்ரச்சந்ந பௌத்த மகராலய மந்த தண்டா: |
வேதாந்த ஸாரஸுகதர்ஶந தீபதண்டா: ராமாநுஜஸ்ய விலஸந்தி முநேஸ்த்ரிதண்டா: || 2 ||

चारित्रोद्धारदण्डं चतुरनयपथालंक्रिया केतुदण्डं सद्विद्यादीपदण्डं सकलकलिकथासंहृतेः कालदण्डम् ।
त्रय्यन्तालम्बदण्डं त्रिभुवनविजयच्छत्रसौवर्णदण्डं धत्तेरामानुजार्यः प्रतिकथक शिरोवज्रदण्डं त्रिदण्डम् ॥

சாரித்ரோத்தார தண்டம் சதுர நயபதாலங்க்ரியா கேதுதண்டம்
ஸத்வித்யாதீபதண்டம் ஸகலகலிகதா ஸம்ஹ்ருதே: காலதண்டம் |
த்ரய்யந்தாலம்பதண்டம் த்ரிபுவந விஜயச்சத்ர ஸௌவர்ணதண்டம்
தத்தே ராமாநுஜார்ய: ப்ரதிகதகஶிரோவஜ்ரதண்டம் த்ரிதண்டம் || 3 ||

त्रय्या माङ्गल्यसूत्रं त्रियुगपदयुगारोहणालम्बसूत्रं सद्विद्यादीपसूत्रं सकलकलिकथासंहृतेः कालसूत्रम् ।
प्रज्ञासूत्रं बुधानां प्रशमधनमनः पद्मिनीनालसूत्रं रक्षासूत्रं मुनीनां जयतु यतिपतेः वक्षसि ब्रह्मसूत्रम् ॥

த்ரய்யாமாங்கல்யஸூத்ரம் த்ரியுகபதயுகாரோஹணாலம்ப ஸூத்ரம்
ஸத்வித்யாதீபஸூத்ரம் ஸகலகலிகதாஸம்ஹ்ருதே காலஸூத்ரம் |
ப்ரஜ்ஞாஸூத்ரம் புதாநாம் ப்ரஶமதநமந: பத்மிநீ நாலஸூத்ரம்
ரக்ஷாஸூத்ரம் முநீநாம் ஜயதி யதிபதே: வக்ஷஸி ப்ரஹ்மஸூத்ரம் || 4 ||

पाषाण्डसागरमहाबडबामुखाग्निः श्रीरङ्गराज चरणाम्बुजमूलदासः ।
श्रीविष्णुलोकमणिमण्डप मार्गदायी रामानुजो विजयते यतिराजराजः ॥ ५ ॥

பாஷண்டஸாகரமஹாபடபா முகாக்நி: ஸ்ரீரங்கராஜ சரணாம்புஜமூலதாஸ: |
ஸ்ரீ விஷ்ணுலோக மணிமண்டப மார்க்கதாயீ ராமாநுஜோ விஜயதே யதிராஜராஜ: || 5 ||

॥ इति धाटी पञ्चकम् ॥

தாடீபஞ்சகம் ஸமாப்தம்

|| श्रीमते रामानुजाय नमः ||

ஸ்ரீ :
எம்பெருமானார் திருவடிகளே சரணம்
திருவரங்கத்தமுதனார் திருவடிகளே சரணம்

திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்த

# இராமாநுச நூற்றந்தாதி

## தனியன்கள்

முன்னை வினையகல மூங்கிற் குடியமுதன்
பொன்னங் கழற்கமலப் போதிரண்டும்—என்னுடைய
சென்னிக் கணியாகச் சேர்த்தினேன் தென்புலத்தார்க்
கென்னக் கடவுடையேன் யான்.

நயந்தரு பேரின்ப மெல்லாம் பழுதென்று நண்ணினர்பால்
சயந்தரு கீர்த்தி இராமாநுசமுனி தாளிணைமேல்
உயர்ந்தகுணத்துத் திருவரங்கத்தமு தோங்குமன்பால்
இயம்பும் கலித்துறை யந்தாதியோத இசை நெஞ்சமே.

சொல்லின் தொகைகொண்டு உனதடிப்போதுக்குத் தொண்டுசெய்யும்
நல்லன்ப ரேத்துமுன் நாமமெல்லாம் என்றன் நாவினுள்ளே
அல்லும்பகலும் அமரும்படி நல்கு அறுசமயம்
வெல்லும் பரம! இராமாநுச! இதென் விண்ணப்பமே.



ஸகலசாஸ்த்ரஸாரமான பெரியதிருமந்திரத்தின் உள்ளுறை பொருளாகவும், ஆழ்வார்களின் அருளிச்செயல்களின் ஸாரமாகவும், ஸ்ரீமதுர கவிகளின் பாசுரத்தாலும் அநுஷ்டானத்தாலும் விளங்குவதாயும், நம் பூர்வாசார்யர்களின் உபதேசங்களாலே அறியத்தக்கதாயும் நம் அனைவர்க்கும் அவச்யம் அறிந்து உஜ்ஜீவிக்கவேண்டியதாயுமுள்ள பரம ரஹஸ்யார்த்தம் 'சரமபர்வநிஷ்டை' எனப்படும். இதுவாவது ஆசார்யனையொழியத் தேவுமற்றறியேன் என்றிருக்கை. இஃதிருக்கும்படியைத் திருவரங்கத்தமுதனார்க்கு எம்பெருமானார் தம் நிர்ஹேதுக க்ருபையாலே கூரத்தாழ்தான் திருவடிகளில் இவரையாச்ரயிப்பித்து அவர் மூலம் உபதேசித்தருளினார். அப்படி அறிந்த சீரியபொருளை விடாமல் சிந்தித்தும் எம்பெருமானார் திருவடிகளை இடைவிடாது ஸேவித்துக்கொண்டும் இருந்த இவருக்குத் தமது பக்திக்குப் போக்குவீடாகப் பாசுரமிட்டுப் பேசவேண்டியிருந்ததாலும், சரமபர்வநிஷ்டையே சீரியது என்னுமதை யாவரும் அறிந்து வாழ்ச்சி பெறவேண்டும் என்ற க்ருபாமூலமான கருத்தினாலும், ஆசார்யாபிமான நிஷ்டர்க்கு அறிந்துகொள்ளத்தக்க அர்த்தங்களையெல்லாம் இந்தப்ரபந்தத்தின் மூலம் வெளியிடுகிறார்.

''எம்பெருமானார் திருவடிகளிலே ப்ரேமமுடையவர்களுக்கு ஸாவித்ரிபோல இது நித்யாநுஸந்தேய விஷயமாகவேணும்'' என்றுப்பாட்டுதோறும் இராமாநுசன் திருநாமத்தை வைத்து நூற்றெட்டுப்பாட்டாக அருளிச்செய்துள்ளப்பட்ட இத்தை **ப்ரபந்நஸாவித்ரி** என்பர் நம் ஆசார்யர்கள்.

மணவாளமாமுனிகள் இந்த நூற்றந்தாதிக்குச் அருளிச்செய்துள்ள உரையைத்தழுவிய கருத்துரையுடன் பாசுரங்களை அநுபவிக்கலாம் மேலே.

**பூமன்னுமாது பொருந்தியமார்பன் *புகழ்மலிந்த
பாமன்னுமாறன் அடிபணிந்துய்ந்தவன் *பல்கலையோர்
தாம்மன்ன வந்த விராமானுசன் சரணாரவிந்தம்
நாம்மன்னிவாழ *நெஞ்சே சொல்லுவோமவன் நாமங்களே. 1

திருவாழ்மார்பனை எம்பெருமானுடைய புகழைப் பாடும் நம்மாழ்வாருடைய திருவடிகளைப்பற்றி உஜ்ஜீவனம் பெற்ற எம்பெருமானார் திருவடிகளே பரமப்ராப்யம் (விரும்பி அடையத்தக்கவை) என்று அத்திருவடிகளில் பொருந்தி வாழும்படியாக அவர் திருநாமங்களைக் கீர்த்தனம் பண்ணுவோம் என்று தம் திருவுள்ளத்தை அழைக்கிறார்.

**கள்ளார்பொழில் தென்னரங்கன் *கமலப்பதங்கள் நெஞ்சில்
கொள்ளாமனிசரை நீங்கி *குறையல்பிரானடிக்கீழ்
விள்ளாதவன்பன் இராமானுசன் மிக்கசீலமல்லால்
உள்ளாதென்னெஞ்சு *ஒன்றறியேனெனக்குற்றபேரியல்வே. 2

திருவரங்கன் திருவடிகளை நெஞ்சில் கொள்ளாதவரை விட்டொழித்து, திருமங்கையாழ்வார் திருவடிகளில் விஞ்சிய அன்புடைய எம்பெருமானாரின் (தாழ்ந்தவரிடமும் ஒன்றிக் கலக்கும்) சீலகுணம் தவிர என் நெஞ்சு வேறு எதையும் நினைக்காதபடி பாங்காயிற்று. இந்த நற்பயனுக்கு ஒரு விரகும் அறிகிறிலேன் என்கிறார்.

பேரியல்நெஞ்சே! அடிபணிந்தேனுன்னை *பேய்ப்பிறவிப்
பூரியரோடுள்ள சுற்றம்புலர்த்தி* பொருவரும்சீர்
ஆரியன்செம்மை யிராமாநுசமுனிக்கன்புசெய்யும்
சீரியபேறுடையார் *அடிக்கீழென்னைச் சேர்த்ததற்கே. 3

அரக்கரசுரர் இயல்புடைய தாழ்ந்தவர்களுடன் உறவாடியிருந்த என்னை அந்த உறவை பறுத்து, குணபூர்ணரான எம்பெருமானாரின் திருவடிஸம்பந்தத்திலே ஊன்றியுள்ள (கூரத்தாழ்வான் போன்ற) பூஜ்யர்களுடைய அடிக்கீழ்த் தம்மைச் சேர்த்ததற்காகத் தமது திருவுள்ளத்தைப் போற்றி வணங்கவும் செய்கிறார்.

என்னைப்புவியில் ஒருபொருளாக்கி *மருள்சுரந்த
முன்னைப்பழவினை வேரறுத்து *ஊழிமுதல்வனையே
பன்னப்பணித்த விராமாநுசன் பரன் பாதமும் என்
சென்னித்தரிக்கவைத்தான் *எனக்கேதும்சிதைவில்லையே. 4

'மீண்டும் பழைய வாஸனையால் நெஞ்சு நழுவி முன்நிலைக்கே கொண்டு போனால் உமது நிஷ்டை பாழ்படுமே' என்று சிலர் கேட்க, 'உலகுக்கெல்லாம் ஆதிகாரணனான எம்பெருமானை யாவரும் உள்ளபடி அறியும்படித் தமது ஸ்ரீஸூக்திகளால் விளக்கமுறச் செய்யும் எம்பெருமானாரின் நிர்ஹேதுகமான அருளுக்கு ஆளான பின் எனக்கு ஒரு கேடும் வராது' என்கிறார்.

எனக்குற்றசெல்வம் இராமாநுசனென்று *இசையகில்லா
மனக்குற்றமாந்தர் பழிக்கில்புகழ் *அவன்மன்னியசீர்
தனக்குற்றவன்பர் அவன் திருநாமங்கள்சாற்றும் என்பா
வினக்குற்றம் காணகில்லார் *பத்தியேய்ந்தவியல்விதென்றே. 5

நமக்கு வகுத்தசேஷி (ஸ்வாமி) எம்பெருமானாரே என்று இசையாத துஷ்டஸ்வபாவமுள்ளார் என் பேச்சை இகழ்வரேல் அதுவே புகழ்ச்சியாகும். உடையவரிடம் அன்பு பூண்ட மஹான்கள் இந்தப்ரபந்தம் பக்தியின் விளைவால் பாடியதென்று திருவுள்ளம் பற்றி, என் சொல்லில் குற்றமிருந்தாலும் காணமாட்டார்கள்.

இயலும்பொருளு மிசையத்தொடுத்து *ஈன்கவிகளன்பால்
மயல்கொண்டுவாழ்த்து மிராமாநுசனை *மதியின்மையால்
பயிலும்கவிகளில் பத்தியில்லாத வென்பாவிநெஞ்சால்
முயல்கின்றனன் *அவன்தன்பெருங்கீர்த்திமொழிந்திடவே. 6

இன்கவிபாடும் பரமகவிகள் தங்கள் பக்திக்குப் போக்கு வீடாகப் பொருத்தமாகப்பாடித் துதிக்கும் இராமாநுசன் பெரும்புகழைப் பாட அன்பொன்றுமில்லாத என்பாவிநெஞ்சால் முயல்கின்றேன். இதனில் மிக்கோர் அயர்வுண்டோ?

**மொழியைக்கடக்கும் பெரும்புகழான் *வஞ்சமுக்குறும்பாம்
குழியைக்கடக்கும் நம்கூரத்தாழ்வான்சரண் கூடியபின்*
பழியைக்கடத்து மிராமாநுசன் புகழ்பாடி அல்லா
வழியைக்கடத்தல் *எனக்கினியாதும் வருத்தமன்றே. 7

தம் அயோக்யதை (தகுதியின்மை) யைக்கண்டு மீளவேண்டா; எல்லா நற்குணங்களுக்கு இருப்பிடமானவரும், வாக்குக்கு அப்பாற்பட்ட பெரும் புகழாளருமான கூரத்தாழ்வான் திருவடிஸம்பந்தமாகிற பலமிருக்கையில் எம்பெருமானாருடைய குணங்களைப்பாடி வாழ்ச்சி பெறுவதில் ச்ரமமேதுமில்லை என்று பாடுவதில் ப்ரவ்ருத்தி அடைகிறார்.

எம்பெருமானார் திருநாமங்களைப்பாடுவோம் என்று திருவுள்ளதை அமைத்தார் முதலில் அவருடைய சிலகுணமன்றி வேறு அறியாமைக்காகத் தம் நெஞ்சைக் கொண்டாடினார் மேலே; அந்தவுபகாரத்துக்காக அந்நெஞ்சை வணங்கினார் அதற்கடுத்து; நெஞ்சு நிலை நிற்காவிடில் செய்வதென்? என்று சங்கை பிறக்க, எம்பெருமானார் க்ருபையிருக்க பயமென்? என்று தேறினார்; தம்பாடல்களில் குறைகண்டு இராமாநுசனடியில் அன்பில்லாதார் நிந்திப்பரே என்றெண்ணி, அன்புள்ளவர் 'இவன் அன்பினால் சொன்னது' என்று கொண்டாடுவர் என்று ஸமாதானமடைந்தார்; மேலும் உடையவரைத் துதிபாடத் தமக்குத் தகுதியில்லை என்று பயந்து, கூரத்தாழ்வான் திருவடிஸம்பந்த பலத்தால் கூடும் என்று ஸமாஹிதராகி துதி செய்யப்புகுகிறார் மேல்.

வருத்தும் புறவிருள்மாற்ற *எம்பொய்கைப்பிரான் மறையின்
குருத்தின்பொருளையும் செந்தமிழ்தன்னையும்கூட்டி *ஒன்றத்
திரித்தன் றெரித்த திருவிளக்கைத் தன்திருவுள்ளத்தே
இருத்தும் பரமன் *இராமானுசனெம் மிறையவனே. 8

சப்தாதி விஷயங்கள்பற்றிய அஜ்ஞானமாகிற புறவிருளைப்போக்கி வேதத்தில் பொதிந்து கிடக்கும் சிறந்த அர்த்தங்களை செஞ்சொற் கவிகளால் ப்ரகாசிக்கச் செய்த பொய்கைப்பிரானை ஸதா நெஞ்சில் நினைக்கும் எம்பெருமானாரே தம்மையாளவந்த ஸ்வாமி என்கிறார்,

இறைவனைக்காணு மிதயத்திருள்கெட *ஞானமென்னும்
நிறைவிளக்கேற்றிய பூதத்திருவடித் தாள்கள் *நெஞ்சத்து
உறையவைத்தாளு மிராமாநுசன் புகழோதும் நல்லோர்
மறையினைக்காத்து *இந்தமண்ணகத்தே மன்னவைப்பவரே. 9

ஸர்வஸ்வாமியான எம்பெருமானை ஸாக்ஷாத்கரிப்பதற்குடலாக இதயத்துள்ள அஜ்ஞான இருளைப்போக்கும் வகையில் ஞானமாகிற விளக்கை ஏற்றித்தந்த பூதத்தாழ்வார் திருவடிகளைத்தம் திருவுள்ளத்தில் ஸதா வைத்தநுபவிக்கும் உடையவர் திவ்ய குணங்களைச் சொல்லிக் கொண்டிருப்பவரே இந்த உலகத்தில் வேதமார்க்க ப்ரதிஷ்டாபகர்கள் என்கிறார்,

மன்னியபேரிருள்மாண்டபின் *கோவலுள்மாமலராள்
தன்னொடுமாயனைக் கண்டமைகாட்டும் *தமிழ்த்தலைவன்
பொன்னடிபோற்று மிராமாநுசற் கன்புபூண்டவர்தாள்
சென்னியிற்சூடும் *திருவுடையா ரென்றும்சீரியரே 10

இப்படி பொய்கையாராலும் பூதத்தாராலும் ஏற்றப்பட்ட திருவிளக்கொளியாலே இதுவரை நிலைத்துநின்ற அஜ்ஞானவிருள் ஒழிந்தபின், "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்று தாம் திருக்கோவலூராயனைக் கண்டமையைக் கூறும் பேயாழ்வார் திருவடிகளைப் போற்றும் இராமாநுசன் திறத்தில் பக்தியுக்தர்களை அடிபணியுமவர் என்றும் சிறந்தவர்கள் என்கிறார்.

சீரியநான்மறைச் செம்பொருள் *செந்தமிழாலளித்த
பாரியலும்புகழ்ப் பாண்பெருமாள் *சரணாம்பதுமத்
தாரியல்சென்னி இராமாநுசன்தன்னைச் சார்ந்தவர்தம்
காரியவண்மை *என்னால்சொல்லொணாதிக்கடலிடத்தே 11

வேதங்களில் தெளிந்த பொருளான எம்பெருமானின் ஸ்வரூப ரூபகுண விபூதிகளை இன் தமிழ்ப்பாக்களால் நமக்கு அருளும் திருப்பாணாழ்வார் திருவடிகளைச் சிரோபூஷணமாக அணிந்துள்ள எம்பெருமானாரை இவ்வுலகில் ஆச்ரயிக்கப் பெற்றவர் கார்யவைலக்ஷண்யத்தை (சிறப்பை) என்னால் பேசித்தலைக்கட்ட முடியாதென்கிறார்.

இடங்கொண்டகீர்த்தி மழிசைக்கிறைவன் இணையடிப்போது
அடங்குமிதயத்தி ராமாநுசன் *அம்பொற்பாதமென்றும்,
கடங்கொண்டிறைஞ்சும் திருமுனிவர்க் கன்றிக காதல்செய்யாத்
திடங்கொண்ட ஞானியர்க்கே *அடியேன் அன்புசெய்வதுவே. 12

உலகம் நிறைந்த புகழாளரான திருமழிசைப்பிரானுடைய திருவடிகளுக்கு இருப்பிடமான திருவுள்ளத்தையுடைய எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம் என்றிருப்பாரையொழிய மற்றவரிடம் ஸ்நேஹமில்லாத உறுதிகொண்ட ஞானிகளிடமே அடியேன் பக்தியுடையவனாவேன் என்கிறார்.

செய்யும் பசுந்துளவத் தொழில்மாலையும் *செந்தமிழில்
பெய்யும் மறைத்தமிழ் மாலையும் *பேராத சீரரங்கத்து
ஐயன் கழற்கணியும் பரன் தாளன்றி ஆதரியா
மெய்யன் *இராமாநுசன் சரணேகதி வேறெனக்கே. 13

தம் கையால் புனையப்பட்ட பசுமையுடைய துளஸி, புஷ்பம் இவைகளாலான மாலைகளையும் இன் தமிழ்ப்பாமாலைகளையும் கல்யாணகுணபூர்ணனை நம்பெருமாள் திருவடிகளில் சாத்தும் தொண்டரடிப்பொடி ஆழ்வார் திருவடிகளையொழிந்த மற்றதை ஆதரியாத எம்பெருமானார் திருவடிகளே தமக்குப் பரமப்ராப்யமென்கிறார்.

கதிக்குப்பதறி *வெங்கானமும் கல்லும் கடலுமெல்லாம்
கொதிக்கத்தவஞ்செய்யும் கொள்கையற்றேன் *கொல்லிகாவலன்சொல்
பதிக்கும்கலைக்கவி பாடும் பெரியவர் பாதங்களே
துதிக்கும்பரமன் *இராமாநுச னென்னைச்சோர்விலனே. 14

ஸ்ரீகுலசேகரப்பெருமாளுடைய திவ்யஸூக்திகளைப் பாடுமவர்களை ஏத்தும் எம்பெருமானார் (என் நெஞ்சில்) எப்போதும் பிரியாமல் இருப்பதால், புருஷார்த்தத்தைப் பெறுவதற்காக ச்ரமஸாத்யமான தவத்தை (பொருப்பிடையேநின்றும் புனல்குளித்தும் ஐந்துநெருப்பிடையேநிற்கவும்....3ம் திரு. 76) மேற்கொள்ளும் தன்மையொழியப் பெற்றேனென்கிறார்.

சோராதகாதல் பெருஞ்சுழிப்பால் *தொல்லைமாலை ஒன்றும்
பாராது அவனைப் பல்லாண்டென்றுகாப்பிடும் *பான்மையன்தாள்
பேராதவுள்ளத் திராமாநுசன்தன் பிறங்கியசீர்
சாராமனிசரைச் சேரேன் *எனக்கென்னதாழ்வினியே? 15

என்றும் மங்காமல் பொங்கும் பரிவாலே நித்யவஸ்துவான எம்பெருமானின் ஸ்வரூபத்தை மறந்து அவனுக்கு ரக்ஷையாக மங்களாசாஸனம் பண்ணும் (பல்லாண்டுபாடும்) பெரியாழ்வார் திருவடிகளில் ஊன்றிய மனத்தினரான எம்பெருமானாரின் கல்யாணகுணங்களை ஏத்தாத மனிசரை அணுகமாட்டேன். எனக்கேலினியென்குறை என்கிறார்.

**தாழ்வொன்றில்லா மறைதாழ்ந்து *தலமுழுதும்கலியே
ஆள்கின்றநாள்வந்து அளித்தவன் காண்மின் *அரங்கர்மௌலி
சூழ்கின்றமாலையைச் சூடிக்கொடுத்தவள் தொல்லருளால்,
வாழ்கின்ற வள்ளல் *இராமாநுசனென்னும் மாமுனியே. 16

உடையவர்பக்கல் ப்ரவணராயிருக்கும் பெருமையைத் தாம் பெற்றதை நினைந்து மகிழும் இவர், யாவரும் அப்படியே ப்ரவணராயிருக்கைக்கு உறுப்பாக, பகவத்வல்லபையாய் அரங்கன் திருமுடியையலங்கரிக்கும் மாலையை சூடிக்கொடுத்த நாச்சியாருடைய அருளுக்குப் பாத்ரமாய் வாழும் எம்பெருமானார் இவ்வுலகத்தவர்க்கு குத்ருஷ்டிகளாலே இழிவுற்ற ச்ருதிகளைத் தம் ஸ்ரீஸூக்திகளால் ரக்ஷித்துத் தந்த மஹோபகாரத்தையருளிச் செய்கிறார்.

முனியார் துயரங்கள்முந்திலும் *இன்பங்கள் மொய்த்திடினும்
கனியார்மனம் கண்ணமங்கைநின்றானை *கலைபரவும்
தனியானையைத் தண்டமிழ்செய்தநீலன் தனக்கு உலகில்
இனியானை *எங்களிராமாநுசனை வந்தெய்தினரே. 17

இப்படி எம்பெருமானார் செய்த உபகாரத்தைக் கேட்டு அவரை ஆச்ரயிக்க ருசி பிறந்தவர்கள், 'அப்படி ஆச்ரயித்தாலும் ஸுக துக்கங்களின் பலனான இன்பம் துன்பம் இவைகளால் கலக்கம் வரில் செய்வதென்?' என்று கேட்க, ஸகல சாஸ்த்ரப்ரதிபாத்யனாய் மத்தகஜம் போல் திருக்கண்ணமங்கையில் ஸேவை ஸாதிக்கும் எம்பெருமானை "சிந்தனுக்கும் குதிப்பாகில் கற்கலாம் கவியின் பொருள்" என்று அவனிடமே சொல்லக்கூடிய பெருமையுடைத்தான இன்தமிழ்ப்பாக்களால் பாடும் திருமங்கையாழ்வார் பக்கல் மாறாத காதலுற்ற எம்பெருமானார் திருவடிகளை ஆச்ரயித்தவர்களுக்கு அப்படிப்பட்ட கலக்கமே வராதென்கிறார்.

எய்தற்கரியமறைகளை *ஆயிரம்இன்தமிழால்
செய்தற் குலகில்வரும் சடகோபனை *சிந்தையுள்ளே
பெய்தற்கிசையும் பெரியவர்சீரை உயிர்களெல்லாம்
உய்தற்குதவும் *இராமாநுசன் எம்முறுதுணையே. 18

கற்றுத்தலைக்கட்ட முடியாமல் பரந்திருக்கிற வேதங்களின் உட்பொருளை (மிகச்சுருக்கமாகவோ, வெகு விரிவாகவோ அல்லாமல்) ஆயிரம் இன்தமிழ்ப் பாசுரங்களினால் அருளிச் செய்வதற்கென்று இவ்வுலகில் வந்து அவதரித்த சடகோப முனிவனை (நம்மாழ்வாரை) தம் நெஞ்சிலே ஸதா த்யானிக்கும் மதுரகவியாழ்வாருடைய ஒப்பற்ற நிஷ்டையை எல்லாவுயிர்களுமறிந்து உய்யும் பொருட்டு ப்ரகாசப்படுத்தும் இராமாநுசனே எனக்கு ஆன துணை என்கிறார்

உறுபெருஞ்செல்வமும் தந்தையும்தாயும் *உயர்குருவும்
வெறிதரு பூமகள்நாதனும் *மாறன்விளங்கியசீர்
நெறிதரும் செந்தமிழாரணமேயென்று இந்நீணிலத்தோர்
அறிதரநின்ற *இராமாநுசன் எனக்காரமுதே. 19

ஐச்வர்யம், தந்தை, தாய், குரு, எம்பெருமான், எல்லாமும் தமக்கு நம்மாழ்வாரருளிச் செய்த தமிழ்வேதமே என்று இவ்வுலகத்தாரறிய நிலைநின்ற எம்பெருமானார் எனக்கு நிரதிசபோக்யனென்கிறார்.

ஆரப்பொழில் தென்குருகைப்பிரான் *அமுதத்திருவாய்
ஈரத்தமிழின் இசையுணர்ந்தோர்கட்கு *இனியவர்தம்
சீரைப்பயின்றுய்யும் சீலங்கொள்நாதமுனியை நெஞ்சால்
வாரிப்பருகும் *இராமாநுசன் என்தன்மாநிதியே. 20

நம்மாழ்வாரருளிச்செய்த ஈரச்சொல்லான திருவாய்மொழியை இசையோடு கற்றவர்களுக்கு ஸஹ்ருத்துக்களாயுள்ளவர்கள் பெருமையறிந்து போற்றும் நாதமுனியை தம் நெஞ்சில் வைத்து ப்ராவண்யத்துடன் போற்றும் எம்பெருமானார் தமக்குப் பரம தநமென்கிறார்.

நிதியைப்பொழியும் முகிலென்று *நீசர்தம் வாசல்பற்றித்
துதிகற்றுலகில் துவள்கின்றிலேனினி *தூய்நெறிசேர்
எதிகட்கிறைவன் யமுனைத்துறைவன் இணையடியாம்
கதிபெற்றுடைய *இராமாநுசன்என்னைக்காத்தனனே. 21

பதீந்த்ரரான யமுனைத்துறைவனுடைய (ஆளவந்தாருடைய) திருவடிகளாகிற பரம ப்ராப்யத்தைப் பெற்று உடையவரான ஸ்வாமி என்னை ரக்ஷித்தருளினார். ஆகையால் நீசர்கள் வாசல்களிலே நின்று அவர்களை உதாரர்களென்று துதிக்கமாட்டேன் என்கிறார்.

கார்த்திகையானும் கரிமுகத்தானும் *கனலும் முக்கண்
மூர்த்தியும் மோடியும் வெப்பும் முதுகிட்டு *மூவுலகும்
பூத்தவனேயென்று போற்றிட வாணன்பிழைபொறுத்த
தீர்த்தனையேத்தும் *இராமாநுசன்என்தன்சேமவைப்பே. 22

கார்த்திகேயனும், கஜாநநனும், முக்கண்மூர்த்தியும், துர்க்கையும், ஜ்வரதேவியும் கண்ணனை எதிரிடமாட்டாமல் புறங்காட்டியோடி பின்பு அவன் வைபவமறிந்து துதிக்க, அவர்களுக்காக பாணாஸுரனின் அபராதத்தைப் பொறுத்த தூயவனான ஸர்வேச்வரனை ஏத்தும் எம்பெருமானார் தமக்கு ஆபத்தநம் என்கிறார்.

வைப்பாய வான்பொருளென்று *நல்லன்பர்மனத்தகத்தே
எப்போதும் வைக்கும்இராமாநுசனை *இருநிலத்தில்
ஒப்பாரிலாத உறுவினையேன் வஞ்சநெஞ்சில்வைத்து
முப்போதும்வாழ்த்துவன் *என்னுமிது அவன்மொய்புகழ்க்கே? 23

குற்றமற்றவரான பக்தர்கள் எம்பெருமானார் நமக்கு ஆபத்ரக்ஷகமான பரமதநம் என்று தங்கள் நெஞ்சிலே வைத்துப்போற்றும் இராமாநுசனை மஹாபாபியான நான் என் கள்ள மனத்தில் வைத்துப் போற்றா நின்றேன். இது அவருடைய பெருங்கீர்த்திக்கு இழுக்கு விளைவியாதோ? என்கிறார்.

மொய்த்தவெந்தீவினையால் பல்லுடல்தொறும்மூத்து *அதனால்
எய்த்தொழிந்தேன் முனநாள்களெல்லாம் *இன்று கண்டுயர்ந்தேன்
பொய்த்தவம்போற்றும்புலைச்சமயங்கள்நிலத்தவியக்
கைத்தமெய்ஞ்ஞானத்து *இராமாநுசனென்னும்கார்தன்னையே. 24

"ஒப்பாரிலாத உறுவினையேன்" என்று சொல்லிக்கொண்ட உமக்கு எம்பெருமானாரை முப்போதும் வாழ்த்துகை எப்படிக்கூடிற்று? என்று கேட்டவருக்குப் பதிலளிக்கிறார். முன்பு மாறி மாறிப் பலபிறப்பும் பிறந்து, கிழத்தனம் வரும்வரை கர்மபலனை அநுபவித்து இளைத்தேன். இன்று பல புலைச்சமயங்களை (நீசமானவை) வேரறுத்த மெய்ஞான விளக்கான எம்பெருமானாரென்ற காளமேகத்தை ஸேவித்ததனால் பெருமைபெற்றேன் என்கிறார்.

காரேய்கருணை இராமாநுச! *இக்கடலிடத்தில்
ஆரேயறிபவர் நின்னருளின்தன்மை? *அல்லலுக்கு
நேரேஉறைவிடம் நான் வந்து நீயென்னை உய்த்தபின் உன்
சீரே உயிர்க்குயிராய் *அடியேற்கின்று தித்திக்குமே. 25

உடையவர் தமக்குப்பண்ணின பரம உபகாரத்தை நினைத்து அத்தால் அவர் திருமுகத்தைப்பார்த்து, "காளமேகம்போல் எல்லாரிடமும் வாசிபாராமல் அருள்சுரக்கும் எம்பெருமானாரே! அல்லலுக்கு நேரேயிருப்பிடமான என்னை தேவரீர் வந்து உய்வித்தபின் தேவரீருடைய கல்யாண குணங்களே அடியேனுக்கு தாரகமாய் இனிக்கின்றன. தேவரீருடைய அருளின் தன்மையை இவ்வுலகத்தில் யார்தான் அறிய ஸமர்த்தர்?" என்று வியப்புறுகிறார்.

திக்குற்றகீர்த்தி இராமாநுசனை *என்செய்வினையாம்
மெய்க்குற்றம் நீக்கி விளங்கிய மேகத்தை *மேவும்நல்லோர்
எக்குற்றவாளர் எதுபிறப்பு ஏதியல்வாகநின்றோர்
அக்குற்றமப்பிறப்பு *அவ்வியல்வே நம்மை ஆட்கொள்ளுமே. 26

எம்பெருமானார் தம்மை ஆட்கொண்டபின்னர் அவருடைய குணங்களே தமக்கு தாரக போஷக போக்யங்களாயிற்று என்றார் கீழே; அவ்வளவன்றிக்கே, ஸ்வாமி திருவடிகளுக்கு அநந்யார்ஹராயிருக்கும் பெருமையுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களுடைய முன்சரித்ரம் எதுவாயினும் அதுவே தன்னை எழுதிக்கொள்ளாநின்றதென்கிறார். என்னுடைய தோஷங்களைப்போக்கி, போக்கியதால் வந்த ப்ரீதியாலே விளங்குபவரும், பரம ஔதார்யமுள்ளவராய் உலகம் நிறைந்த புகழாளராய் விளங்குமவரான எம்பெருமானாரை ஆச்ரயித்துள்ள ஸத்துக்களின் பூர்வசரித்ரம் எதுவாயினும் ஆயிடுக; அதுவே தம்மை ஆட்கொள்ள வல்லது; எக்குற்றவாளராயினும் எப்பிறப்பில் பிறந்தவராயினும், எந்த ஸ்வபாவமுடையவராயினும் எம்பெருமானாரை ஆச்ரயித்து அந்த மாசுகளெல்லாம் நீங்கப்பெற்று 'நல்லோர்' என்றநிலை பெறலாம் என்று தமக்கு தைர்யம் பிறப்பித்தவர்களன்றோ? அவர்கள் எப்படிப்பட்டவராயினும் பரம உத்தேச்யர்கள் என்கிறார்.

கொள்ளக் குறைவற்றிலங்கி *கொழுந்துவிட்டோங்கியவுன்
வள்ளல்தனத்தினால் வல்வினையேன்மனம் நீபுகுந்தாய்*
வெள்ளைச்சுடர்விடும் உன்பெருமேன்மைக் கிழுக்கிதென்று
தள்ளுற்றிரங்கும் *இராமாநுச! என்தனிநெஞ்சமே. 27

இப்படி இவர் உடையவருக்கு அநந்யார்ஹர் திறத்தில் ஈடுபட்டவாறே ஸ்வாமி இவர் நெஞ்சுக்குத் தம்மை ஸர்வகாலமும் விஷயமாக்கிக் கொடுக்க (நெஞ்சில் நிலைபெற்றிருக்க) மஹாபாபியான என்நெஞ்சிலே புகுந்தருளினது பரிசுத்தமான தேவரீர் ப்ரபாவத்துக்கு அவத்யாவஹம் (மாசுபடுத்துவது) என்று என் நெஞ்சு தளராநின்றதென்கிறார்.

நெஞ்சில்கறைகொண்ட கஞ்சனைக்காய்ந்தநிமலன் *நங்கள்
பஞ்சித்திருவடிப் பின்னைதன்காதலன் *பாதம்நண்ணா
வஞ்சர்க் கரிய விராமாநுசன் புகழன்றி யென்வாய்
கொஞ்சிப்பரவகில்லாது *என்னவாழ்வுஇன்றுகூடியதே! 28

கம்ஸாந்தகனும் பின்னைதன்கேள்வனுமான கண்ணனை ஆச்ரயிக்காத ஆத்மாபஹாரிகளுக்கு அணுக இயலாத எம்பெருமானார் குணங்களையொழிய என்வாக்கு வேறு எதையும் போற்றித்துதிப்பதில்லை. "மந:பூர்வோ வாகுத்தர:" என்று மனதைப்பின் செல்லும் வாக்குக்கு ஸ்வாமி விஷயத்திலுண்டான ப்ராவண்யத்தைக் கண்டு ஆச்சர்யப்படுகிறார்.

கூட்டும்விதி என்றுகூடுங்கொலோ? *தென்குருகைப்பிரான்,
பாட்டென்னும் வேதப்பசுந்தமிழ்தன்னை *தன்பத்தியென்னும்
வீட்டின்கண்வைத்த விராமாநுசன் புகழ்மெய்யுணர்ந்தோர்
ஈட்டங்கள்தன்னை *என்நாட்டங்கள் கண்டின்பமெய்திடவே. 29

நம்மாழ்வாருடைய பாடல்களான பசுந்தமிழ் வேதந்தன்னை (திருவாய்மொழியை) த்தம் பக்திக்கு விஷயமாக்கிக் கொண்டுள்ள எம்பெருமானாருடைய திவ்ய குணங்களை உள்ளபடி உணர்ந்து ஈடுபட்டிருக்குமவர்கள் திரள்களை என்கண்கள் கண்டுகளிக்கும்படி கூட்டக்கடவ பாக்கியம் என்று வாய்க்குமோ? என்கிறார்.

இன்பந்தரு பெருவீடு வந்தெய்திலென்? *எண்ணிறந்த
துன்பந்தரு நிரயம் பலசூழிலென்? *தொல்லுலகில்
மன்பல்லுயிர்கட்கிறையவன் மாயனென மொழிந்த
அன்பன்அனகன் *இராமாநுசன்என்னையாண்டனனே. 30

இப்படி இவர் ப்ரார்த்தித்ததைத் கேட்டவர்கள் உமக்குவேண்டுவது இவ்வளவு தானோ? பரமபதப்ராப்தி வேண்டாவோ? என்று வினவ, எம்பெருமானை ஸர்வஸ்மாத் பரன் என்று தம் ஸ்ரீஸூக்திகள் மூலமாக நமக்கு அருளிச்செய்த குற்றமில் சீலரும், பரம காருணிகருமான எம்பெருமானார் என்னை அடிமை கொண்டருளப்பெற்றபின் ஸுகாவஹ மான மோக்ஷம் கிடைத்தாலென்ன? பரம துக்காவஹமான நரகங்கள் வந்து சூழ்ந்தால் தான் என்ன? என்கிறார்.

**ஆண்டுகள்நாள் திங்களாய் *நிகழ்கால மெல்லாம்மனமே
ஈண்டு பல்யோனிகள் தோறுழல்வோம்*இன்றோ ரெண்ணின்றியே
காண்டகு தோளண்ணல் தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப்
பூண்டவன்பாளன் *இராமாநுசனைப்பொருந்தினமே. 31

அநாதிகாலமாக எண்ணமுடியாத பலபிறவிகளெடுத்துத் திரிந்தநாம் இன்று நிர்ஹேதுக மாக ஸர்வஸ்வாமியான பேரருளாளனுடைய திருவடிகளில் ஒப்பற்ற பக்தி பூண்ட எம்பெரு மானாரைச் சேரப்பெற்றோம் என்று ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே தம் திருவுள்ளத்தைக்குறித்து அருளிச் செய்கிறார்.

பொருந்தியதேசும் பொறையும் திறலும்புகழும் *நல்ல
திருந்தியஞானமும் செல்வமும் சேரும் *செறுகலியால்
வருந்திய ஞாலத்தை வண்மையினால் வந்தெடுத்தளித்த
அருந்தவன் *எங்களிராமாநுசனை யடைபவர்க்கே. 32

"இராமாநுசனைப் பொருந்தினம்" என்று இவர் களிப்புறுவதைக் கண்டவர்கள் 'நாங்களும் இவ்விஷயத்தைப் பெறவேணும்; ஆனால் உம்மைப்போல் ஆத்மகுணங்களொன்று மில்லையே' என்று வருந்த, 'தம் நிர்ஹேதுக்ருபையால், கலிகோலாஹலத்தால் வருந்தும் இந்த பூமியை உத்தரித்து ரக்ஷிக்குமவரும், ப்ரபன்னகுலபதியாய் விளங்குமவருமான எம்ஸ்வாமி எம்பெருமானாரை ஆச்ரயித்தவருக்கு ஆத்மகுணாதிகளெல்லாம் தானே வந்து சேரும்' என்கிறார்.

அடையார்கமலத் தலர்மகள்கேள்வன் *கையாழியென்னும்
படையோடுநாந்தகமும் படர்தண்டும் *ஒண்சார்ங்கவில்லும்
புடையார்புரிசங்கமும் இந்தப் பூதலம் காப்பதற்கென்று*
இடையே இராமாநுச முனியாயின இந்நிலத்தே. 33

எம்பெருமானாரை அடைபவருக்கு ஆத்மகுணங்கள் தன்னடையேவரும் என்றீரே; இந்த்ரியஜயம் முதலான அரும்பெரும் பேறுகள் மநஸ் முதலானவைகளுக்கு அபிமாநதேவதை களான திருவாழியாழ்வான் தொடக்கமான திவ்யாயுதங்களின் அருளாலன்றோ வரவேண்டும்?

என்று சிலர் கேட்க, இந்த பூமியை ரக்ஷிப்பதற்காக அந்த ஸ்ரீ பஞ்சாயுதாழ்வார்களும் எம்பெருமானாரிடத்திலே வந்து குடிகொண்டனர் என்கிறார். பஞ்சாயுதாழ்வார்களே எம்பெருமானாராக வந்து பிறந்துள்ளனர் எனவுமாம்.

நிலத்தைச் செறுத்துண்ணும் நீசக்கலியை *நினைப்பரிய
பலத்தைச் செறுத்தும் பிறங்கியதில்லை *என்பெய்வினை தென்
புலத்தில் பொறித்தவப் புத்தகச்சும்மை பொறுக்கியபின்
நலத்தைப் பொறுத்தது *இராமாநுசன்தன் நயப்புகழே. 34

கலிதோஷாபிபூதமான ஜகத்தை ரக்ஷித்தமையைச் சொல்லி, இவரை ஆச்ரயிப்பார்க்கு ஆத்மகுணாதிகள்தானே வந்து சேருமென்னுமத்தையும் அருளிச் செய்தார் கீழே. எம்பெருமானாரின்புகழ் பொலிந்து விளங்கியது உலகத்தைக் கலிதோஷத்தைப் போக்கி ரக்ஷித்ததனாலல்ல; பெரும் பாபங்களைச் செய்துள்ள என் விஷயமாக யமலோகத்தில் எழுதப்பட்டுள்ள கணக்குச் சுமைகளை எரித்து என்னை மாசற்றவனாக ஆக்கி அடிமைகொண்ட பின்பே பொலிந்து விளக்கமுற்றது என்கிறார்.

நயவேன்ஒருதெய்வம் நானிலத்தே *சிலமானிடத்தைப்
புயலேயெனக்கவி போற்றிசெய்யேன் *பொன்னரங்க மென்னில்
மயலேபெருகு மிராமாநுசன் மன்னுமாமலர்த்தாள்
அயரேன் *அருவினை யென்னைஎவ்வாறின் றடர்ப்பதுவே? 35

எம்பெருமானார் உமதளவில் செய்த விஷயீகாரத்தைப் பார்த்துக் கர்மமெல்லாம் கழிந்தது என்றீரேயாகிலும், ப்ரக்ருதிஸம்பந்தமிருக்கையால் அவை வந்து இன்னம் ஆக்ரமித்தால் என்னாம்? என்று சிலர் கேட்க, 'புறம்பொரு தெய்வத்தை விரும்பேன். இந்த லோகத்தில் சில நீசமனிதர்களை உதாரனே! என்று கவிபாடித் துதியேன். பொன்னரங்க மென்றால் அளவற்ற வ்யாமோஹம் கொள்ளும் எம்பெருமானாரின் திருவடித்தாமரைகளை என்றும் மறவேன். இப்படி ஆனபின்பு அவை (கர்மா) இனிவந்து ஆக்ரமிக்க விரகேது?' என்கிறார்.

அடல்கொண்டநேமியன்ஆருயிர்நாதன் *அன்றுஆரணச்சொல்
கடல்கொண்ட வொண்பொருள் கண்டளிப்ப *பின்னும்காசினியோர்
இடரின்கண் வீழ்ந்திடத் தானுமவ்வொண்பொருள் கொண்டுஅவர்பின்
படரும்குணன் *எம்மிராமாநுசன்தன் படியிதுவே. 36

"இராமாநுசன் மன்னுமாமலர்த்தாள் அயரேன்" என்றீரே; நாங்களும் அவரைப் பற்றும்படி அந்த ராமாநுசனுடைய தன்மைகளைச் சொல்லுவீர் என்று சிலர் ப்ரார்த்திக்க, அதை அருளிச் செய்கிறார்—தேசுடைய கூராழியைக் கையில் ஏந்தியிருப்பவனும், ஸர்வஸ்வாமியுமான எம்பெருமான், பார்த்தஸாரதியாய் கீதாசாஸ்த்ரத்தின் வாயிலாக வேதக்கடலைக் கடைந்தெடுத்த சீரியபொருளை உபதேசிக்க, அவைகளைக்கொண்டு இந்த உலகில் ஸம்ஸாரமாகிற பெரும் துக்கத்தில் அழுந்தியவர்களை, அவர்கள் இவரிடமுள்ள அர்த்தங்களைக் கைக்கொள்ளும்படி அவர்களைப் பின்தொடரும் சீலமுடைமை ராமாநுசனுடைய ஸ்வபாவம் என்கிறார்.

படிகொண்ட கீர்த்தி இராமாயணமென்னும் பத்திவெள்ளம்*
குடிகொண்ட கோயிலிராமாநுசன் குணங்கூறும் *அன்பர்
கடிகொண்ட மாமலர்த்தாள் கலந்துள்ளம் கனியும் நல்லோர்
அடிகண்டு கொண்டுகந்து *என்னையும்ஆளவர்க்காக்கினரே. 37

இப்படி இருக்கிற ராமாநுசர் தம்மை நீர் தாம் அறிந்து பற்றின ப்ரகாரம் என்? என்று அவர்கள் கேட்க; உலகம் நிறைந்த புகழையுடைத்தான ராமாயணமென்ற பக்தி

வெள்ளம் நித்யவாஸம் பண்ணும் திவ்ய ஸ்தானமாயிருக்கிற இராமாநுசன் திருவடி ஸம்பந்திகளே பரம உத்தேச்யர் என்றிருக்கும் மஹான்கள், இவ்வாத்மவஸ்துவும் அங்குத்தைக்கு ஆகவேண்டுமென்று உகப்புடன் அடியேனை எம்பெருமானுர்க்கு ஆட்படும்படி சேர்த்தனர் என்று சொல்லுகிருர்.

ஆக்கியடிமைநிலைப்பித்தனை என்னையின்று *அவமே
போக்கிப் புறத்திட்டதென்பொருளா முன்பு? *புண்ணியர்தம்
வாக்கில் பிரியாவிராமாநுச! நின்னருளின் வண்ணம்,
நோக்கில் தெரிவரிதால் *உரையாய்இந்தநுண்பொருளே. 38

இப்படி ஸ்ரீவைஷ்ணவர்கள் சேர்க்கும்போது, சேரமாட்டேன் என்ற மனநிலை ஒழிய வேணுமே; அநுகூல நிலையை வளர்ப்பவன் ஈச்வரன்; எம்பெருமானுரே அந்த ஈச்வரன் என்று ஆராய்ந்தறிந்து, அவரையே, ஸ்வாமிந்! "இன்று அடியேனையும் ஒரு பொருளாக்கித் தேவரீருடைய பரமக்ருபையால் தேவரீர் திருவடிகளுக்கு அடிமையாகும்படி ஆட்கொண்டீர்; முன்பு காலமெல்லாம் வீணே போக்கும்படி இங்கேயே வெளிவிஷயங்களில் ஈடுபட்டுத் திரியும்படி விட்டிருந்தேனோ? தேவரீருடைய திவ்யகுணங்களை என்றும் அநுபவிக்கும் பாக்யவான்கள் வாக்குக்கு நிச்சலும் விஷயமாயுள்ளவரே! அங்குத்தைத் திருவருள் இன்னவிதமென்று அறியப் போகவில்லை. ஸ்வாமியே அருளிச் செய்யவேணும்" என்று கேட்கிருர்.

பொருளும் புதல்வரும் பூமியும் *பூங்குழலாரு மென்றே
மருள்கொண்டிளைக்கும் நமக்குநெஞ்சே! *மற்றுளார்தரமோ?
இருள்கொண்ட வெந்துயர் மாற்றித் தன்னீறில் பெரும்புகழே
தெருளும் தெருள்தந்து *இராமாநுசன் செய்யும்சேமங்களே. 39

இவர் கேட்டதற்கு பதில் கிட்டாததால் அத்திருவருளாலே தாம் பெற்ற நன்மைகளை எண்ணி, ப்ரீதி, ஆகந்தம் இவைகள் மேலிட, தம் திருவுள்ளத்தை நோக்கி, 'எம்பெருமானுர் நமக்குச் செய்யும் சேமம் (ரக்ஷை) மற்றவர் செய்யக்கூடாத அளவில் பெரிது என்று ப்ரீதராகிருர். செல்வம், மனைவி, மக்கள், இவைகளைப் பெரிதாக மதித்து அஜ்ஞானத்தில் உழன்ற என்னைத் தம்முடைய எண்ணற்ற திவ்ய குணங்களை அறிந்து போற்றும்படி ஞானம் கனிந்த நலம் தந்ததன்றோ இவர் செய்யும் பெரும் சேமம்? என்கிருர்.

சேமநல்வீடும் பொருளும் தருமமும் *சீரியநற்
காமமும் என்றிவை நான்கென்பர் *நான்கினும் கண்ணனுக்கே
ஆமதுகாமம் அறம்பொருள் வீடிதற் கென்றுரைத்தான்
வாமனன்சீலன் *இராமானுசன்இந்தமண்மிசையே. 40

எம்பெருமானுர் தமக்குச் செய்த உபகாரத்தை அருளிச்செய்தார் கீழே. உலகத்துக்கு செய்யும் உபகாரத்தைச் சொல்லுகிருரிங்கே. எம்பெருமான் வாமனுவதாரமெடுத்து யாவர் தலையிலும் தன் திருவடிகளை மடுத்து உதவியதற்கீடானது எம்பெருமானுர் நல்கும் நல்லுபதேசம். அதாவது; சாஸ்த்ரங்களில் சொன்னபடி ஒரு புருஷன் வேண்டிப் பெறக் கூடியவை அறம், பொருள், வீடு (மோக்ஷம்), இன்பம் (காமம்) என்று நாலு வகையாயிருக்கும். இவற்றில் காமம் பகவத்விஷயத்திலேயாதல் மிகச்சிறந்தது (விரும்பத்தக்கது). மற்ற மூன்றும் பகவத் ஸம்ச்லேஷமாகிற காமத்தை அடியொற்றி அமையவேண்டும்—என்பது.

மண்மிசையோனிகள் தோறும்பிறந்து *எங்கள்மாதவனே
கண்ணுறநிற்கிலும் காணகில்லா *உலகோர்களெல்லாம்
அண்ணலிராமாநுசன் வந்துதோன்றியவப்பொழுதே
நண்ணருஞானம் தலைக்கொண்டு *நாரணற்காயினரே. 41

எம்பெருமானாருபதேசத்தாலே லோகம் திருந்தியபடியைக்கண்டு "ஸர்வேச்வரன் அநேக அவதாரங்கள் பண்ணித் தன்னை உலகத்தவர்கள் நேரே காணும்படிக் காட்டியும் காணாதிருந்த ஜனங்கள் ஸ்வாமி ராமாநுஜர் அவதரித்த உடனே பெறுதற்கரிதான ஞானத்தைப் பெற்று பரம பாகவதர்களானார்கள் என்கிறார். எம்பெருமானுடைய அவதாரங்களைக் காட்டிலும் எம்பெருமானாருடைய அவதாரமே பயனுள்ளதாயிற்று என்றபடி.

ஆயிழையார் கொங்கைதங்கும் *அக்காதலளற்றழுந்தி
மாயுமென்னாவியை வந்தெடுத்தானின்று *மாமலராள்
நாயகன் எல்லாவுயிர்கட்கும்நாதன் அரங்கனென்னும்
தூயவன் *தீதிலிராமானுசன் தொல்லருள்சுரந்தே. 42

பகவானுடைய அவதார காலங்களில் திருந்தாத ஸம்ஸாரிகள் எல்லோரும் எம்பெருமானார் அவதரித்ததால் திருந்தினரென்றார்; அப்படித்திருந்தியமைக்குத் தம்மையே உதாரணமாகக் காட்டுகிறார். ச்ரிய:பதியான பெரியபெருமாளே எல்லாவுலகுக்கும் ஸ்வாமியானவன் என்று தெளியவுபதேசிப்பவரும், குற்றமேதுமில்லாமல் தூய்மை படைத்தவருமான எம்பெருமானார், ஸ்த்ரீலோலனாய், விஷயப்ராவண்யமாகிற சேற்றிலே அழுந்திப் பாழ்பட்டுப் போகிற என்னைத் தம்முடைய நிர்ஹேதுகக்ருபையடியாகத் தூக்கிவிட்டனரன்றோ? என்று ப்ரீதராகிறார்.

சுரக்கும் திருவுமுணர்வும் *சொலப்புகில் வாயமுதம்
பரக்கும் இருவினைபற் றறவோடும் *படியிலுள்ளீர்!
உரைக்கின்றனன்உமக்கு யான்அறஞ்சீறு முறுகலியைத்
துரக்கும்பெருமை *இராமாநுசனென்று சொல்லுமினே. 43

இப்படித் தம்மை விஷயீகரிக்கையால் வந்தப்ரீதியால் உலகத்தவரைப்பார்த்து, எல்லாரும் எம்பெருமானார் திருநாமத்தைச் சொல்லுங்கள் என்று உபதேசிக்கிறார். "பூலோகவாஸிகளே! ஒன்றுண்டு உங்களுக்கு நானுரைப்பது. தர்மந்தழைக்காமல் தடுக்கும் கலியை ஒழிக்கும் ஸ்ரீராமாநுஜ திவ்யநாமத்தை வாயாரச் சொல்லுங்கள். வாக்குக்கு இனிக்கும் அத்திருநாமம் ஞானபக்திகளைப் பெருக்கி பாவம் நசிக்கும்படிச் செய்யும்" என்கிறார். எல்லா நன்மைகளும் உண்டாகும் என்றபடி.

சொல்லார் தமிழொருமூன்றும் *சுருதிகள்நான்கும் எல்லை
யில்லாவற நெறியாவும் தெரிந்தவன் *எண்ணருஞ்சீர்
நல்லார்பரவும்இராமாநுசன் திருநாமம்நம்பிக்
கல்லார் அகலிடத்தோர் *எதுபேறென்று காமிப்பரே. 44

இப்படி உபதேசித்தும் ஒருவரும் இதில் மூளாமையால் அவர்கள் படியைக் கண்டு வருந்துகிறார். இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழையும் (திராவிடசாஸ்த்ரங்கள் அனைத்தையும்) நான்கு வேதங்களையும், நீதில் நெறியான தர்மசாஸ்த்ரங்கள் யாவற்றையும், அறிந்தவரும் ஒப்பற்ற திவ்யகுணங்களையுடையவரும், மஹாத்மாக்களால் துதிக்கப்படுபவராயுமுள்ள உடையவருடைய திவ்யநாமங்களை என்பேச்சை நம்பி கற்காமல், "உய்யும் வகை யாது?" என்று கேட்டுத்திரிகிறார்களே! ஐயோ! என்கிறார்.

பேறொன்றுமற்றில்லை நின்சரணன்றி *அப்பேறளித்தற்கு
ஆறொன்றுமில்லை மற்றச்சரணன்றி *என்றிப்பொருளைத்
தேறுமவர்க்குமெனக்குமுனைத்தந்தசெம்மை சொல்லால்
கூறும்பரமன்று *இராமாநுச! மெய்ம்மைகூறிடிலே. 45

இப்படி விமுகராய் இருந்தவர்களிலே முன்புதாமும் இருக்கத் தம்மை நிர்ஹேதுகமாக விஷயீகரித்து, தம்திருவடிகளே ப்ராப்யமும் (அடையத்தகுந்தபேறு), ப்ராபகமும் (அந்தப்

பேற்றைப்படையும் வழி) என்று விச்வஸித்திருக்கும்படி பண்ணின உபகாரத்தை நினைத்து, இந்த உபகாரம் வாயால் வாசகமிட்டுச் சொல்லவொண்ணாதென்கிறார். எம்பெருமானார் திருவடிகளே தஞ்சம் என்று நன்றாக அறிந்து கொண்டு ஒழுகும் மகான்களுக்குப் போலே அறிவிலியான எனக்கும் தேவரீரைப் புலாகக்காட்டித்தந்த செம்மைகுணம் (ஆர்ஜவம்) மிக உயர்ந்து என்கிறார்,

கூறும்சமயங்க ளாறும்குலைய *குவலயத்தே
மாறன்பணித்த மறையுணர்ந்தோனை *மதியிலியேன்
தேறும்படி என்மனம்புகுந்தானைத் திசையனைத்தும்
ஏறும்குணனை *இராமாநுசனை யிறைஞ்சினமே. 46

எம்பெருமானார் செய்தருளின உபகாரத்தை நினைத்து அதற்குத் தோற்றுத் திருவடிகளிலே வணங்குகிறார். உலகத்தில் ப்ரமாணம், அதற்கேற்ற யுக்தி இவைகளுக்கு ஒவ்வாமல் மனம் போனபடி பேசும் புறச்சமயங்கள் ஆறும் சிதறுண்டுபோம்படி ஆழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழியை நன்றாக அறிந்தவரும், அறிவிலியான நானும் தெளியும்படி என்னெஞ்சில் புகுந்தவரும் திவ்யகுணங்களினால் உலகம் நிறைந்த புகழாளருமான ஸ்வாமியை வணங்கினோம் என்கிறார்.

இறைஞ்சப்படும்பரன் ஈசனரங்கனென்று *இவ்வுலகத்து
அறம்செப்பும் அண்ணலிராமாநுசன் *என்னருவினையின்
திறம்செற்று இரவும்பகலும்விடாதுஎன்தன் சிந்தையுள்ளே
நிறைந்தொப்பறவிருந்தான் *எனக்காரும் நிகரில்லையே. 47

“மதியிலியேன் தேறும்படி என்மனம் புகுந்தான்” என்றார் கீழ். உலகத்தவர்களுக்குத் “தாங்கள் எல்லாரும் வணங்கத்தக்க தெய்வம் ஸ்ரீரங்கநாதனே” என்று உண்மை நெறியை அருளிச்செய்து பகவத்ஸமாச்ரயணருசியை விளைவிக்கும் அண்ணலான எம்பெருமானார் தம்முடைய ப்ராப்யவிரோதியை அழித்து தம் நெஞ்சில் நிறைவுற்ற விஷயீகாரத்தை எண்ணி இப்படி அருள்பெற்ற எனக்கு ஒப்பார் இந்தபூமியில் யாருமே இல்லை என்கிறார்.

நிகரின்றிநின்ற என்நீசதைக்கு *நின்னருளின்கணன்றிப்
புகலொன்றுமில்லை அருட்கும்ஃதேபுகல் *புன்மையிலோர்
பகரும்பெருமை இராமாநுச! இனி நாம்பழுதே
அகலும்பொருளென்? *பயனிருவோமுக்கு மானபின்னே. 48

“எனக்காரும் நிகரில்லை” என்று இவர் சொன்னவாறே, எம்பெருமானார் இவரைப் பார்த்து “நீர் நம்மை விட்டு வேறொருவரைப் பற்றக்கூடும்; நாமும் உம்மை விட்டு வேறொருவரை விரும்பக்கூடும்; அப்படியாயின் இந்த மகிழ்ச்சி உமக்கு நிலையானதாக இராதே” என்ன, என்னுடைய தாழ்ச்சிக்கு தேவரீர் க்ருபையும் தேவரீர் க்ருபைக்கு அடியேனுடைய தாழ்ச்சியும் (ஒன்றுக்கொன்றே) புகலாயிருக்க வீணே நாம் இனி அகலுகைக்கு காரணமேயில்லை என்கிறார். தேவரீர் அருளுக்கு அறத்தாழ்ந்த என்னில் கீழானவன் கிடைக்கமாட்டான்; தேவரீர் க்ருபையாலல்லது அதிநீசனை அடியேனை உயர்த்த வேறொருவர்க்குப் போகாது என்றபடி. [இப்பாசுரம் ததஹம் த்வத்ருதே நாதவான்.....ஸ்தோத்ரரத்னம் 51 ம்ச்லோகத்தை அடியொற்றியது]

ஆனதுசெம்மையறநெறி *பொய்ம்மை யறுசமயம்
போனதுபொன்றி இறந்ததுவெங்கலி *பூங்கமலத்
தேனதிபாய்வயல் தென்னரங்கன்கழல் சென்னிவைத்துத்
தானதில்மன்னும் *இராமாநுசன் இத்தலத்துதித்தே. 49

விரோதிகளைப்போக்கித் தம்முடைய நெஞ்சில் எம்பெருமானார் நித்ய வாஸம் பண்ணியருளுகிற பேருபகாரத்தை நினைத்து அதனால் வந்த ப்ரீதியையும் அந்த ப்ரீதியினுடைய நிலை

யின்மைக்குக் காரணமில்லாமையையும் அருளிச்செய்தார் கீழிரண்டுபாட்டுக்களாலே. இதில் ஸ்வாமி திருவவதரித்தருளின பின்பு உலகத்துக்குண்டான வாழ்ச்சியை அநுஸந்தித்து இனியராகிறார்.

தாமரைபுஷ்பங்களிலுண்டான தேன் ஆறாகப் பாயும் வயல்கள் சூழ்ந்த திருவரங்கத்தில் கோயில் கொண்டுள்ள பெரிய பெருமாளுடைய திருவடிகளைச் சென்னிக்கணியாய்ச் சூடி அத்திருவடிகளில் மிகவும் ப்ராவண்யமுள்ள எம்பெருமானார் இவ்வுலகில் அவதரித்ததனால் கொடியகலிமாண்டது; பொய்யே உருவான அறுசமயங்களும் (ஷட்தர்சனம்) சிதறிற்று.

உதிப்பன உத்தமர்சிந்தையுள் *ஒன்னலர் நெஞ்சமஞ்சிக்
கொதித்திட மாறிநடப்பன *கொள்ளைவன் குற்றமெல்லாம்
பதித்தவென் புன்கவிப் பாவினம் பூண்டன பாவுதொல்சீர்
எதித்தலைநாதன் *இராமாநுசன் தன் இணையடியே. 50

"தென்னரங்கன் கழல் சென்னிவைத்துத் தானதில் மன்னும்" என்று எம்பெருமானாருக்குப் பெரியபெருமாள் திருவடிகளிலுண்டான ப்ராவண்யாதிசயத்தைச் சொன்னார் கீழ். அதனடியாக தம் தெய்வமான ஸ்வாமியின் திருவடிகளைச் சொல்லி அதன் தன்மைகளை நினைத்து இனியராகிறார்.

உலகம் நிறைந்த புகழாளரான (கல்யாணகுணைத்மகரான) யதீந்த்ரர் திருவடிகள் மஹாத்மாக்களுடைய திருவுள்ளங்களில் விளங்கும்; பாஹ்யர்கள், குத்ருஷ்டிகளான எதிரிகள் நெஞ்சங்கள் அஞ்சிநடுங்கும்படி களிநடமிடும்; குற்றங்கள் மலிந்த என்னுடைய துதிப்பாக்களையும் ஏற்குமவை.

அடியைத்தொடர்ந்தெழும் ஐவர்கட்காய் *அன்றுபாரதப்போர்
முடியப் பரிநெடுந்தேர்விடும்கோனை *முழுதுணர்ந்த
அடியர்க்கமுதம் இராமாநுசன் என்னையாளவந்துஇப்
படியில்பிறந்தது *மற்றில்லைகாரணம் பார்த்திடிலே. 51

எம்பெருமானார் இந்த உலகத்தில் அவதரித்தருளியது அடியேனொருவனை அடிமை கொள்ளுகைக்காகவே; வேறு காரணமேதும் இல்லையென்கிறார்.

முன்பு தன் திருவடியை நம்பிப்பற்றி வாழ்ந்த பஞ்சபாண்டவர்களுக்காக, அவர்களுடைய எதிரிகள் மாண்டு போம்படி பெரிய தேரைக் குதிரைகள் பூட்டி நடத்திய ஸர்வேச்வரனை உள்ளபடி முழுதும் அறிந்த பரமபாகவதர்களுக்கு அமுதெனத்தித்திக்கும் இராமாநுசன் இந்தப் பூவுலகில் வந்து பிறந்தது என்னை மகிழ்விக்கவே. வேறு காரணமேதும் புலப்படவில்லை.

பார்த்தான் அறுசமயங்கள்பதைப்ப *இப்பார்முழுதும்
போர்த்தான் புகழ்கொண்டு புன்மையினேனிடைத் தான்புகுந்து*
தீர்த்தான் இருவினைதீர்த்து அரங்கன்செய்ய தாளிணையோடு
ஆர்த்தான் *இவையெம்மி ராமாநுசன்செய்யுமற்புதமே. 52

"என்னையாளவந்திப்படியில் பிறந்தது" என்று ஒருவராலும் அளவரியனான (கடைத்தேறப்பண்ணஇயலாத) என்னை ஆளுகைக்காக வந்தவரித்தாகச் சொன்னார். மேலும் அவர் செய்த அரிய செயல்களை அருளிச் செய்கிறார். சாக்யர், உலூக்யர், பௌத்தர், சார்வாகர், பாசுபதர், கணாதர் என்று சொல்லப்பட்ட ஷட்தர்சனஸ்தர்களும் துடித்து மாளும்படி பார்த்தார் (இவர் ச்ருதிகளையும் ப்ரமாணங்களையும் முன்னும் பின்னும் பார்த்து பாஷ்யமருளிச் செய்கையாலேயே இவர்கள் மாண்டுபோயினர். இந்த ஸர்ப்பத்தின் பார்வையின் தீக்ஷணம் இது. அவதாரஸ்தல திவ்யமங்களவிக்ரஹத்தில் அருள்நோக்கையும் ஸர்ப்பவீக்ஷணத்தையும்

இங்கே அநுபவிக்கலாம்). இந்த பூமண்டலம் பூராவும் புகழ் பரவும்படி வாழ்ந்தார். அந்த் தாழ்ந்தவனான என்னிடம் வெறிதேயருள் செய்து என்னுடைய பெரும் பாபங்களைப் போக்கி, என்னை எம்பெருமான் திருவடிகளில் சேர்ப்பித்தார். இவை நம் ஸ்வாமி செய்தருளின அற்புத மான அரிய செயல்களாம்.

அற்புதன் செம்மை யிராமா நுசன் *என்னையாளவந்த
கற்பகம் கற்றவர் காமுறுசீலன் *கருதரிய
பற்பல்லுயிர்களும் பல்லுலகுயாவும் பரனதென்னும்
நற்பொருள்தன்னை *இந்நாளிலத்தேவந்து நாட்டினனே. 53

"பார்த்தானறு சமயங்கள் பதைப்ப" என்று புறச்சமயங்கள் குலையும்படிபண்ணி இவர் ஸ்தாபித்த அர்த்தம் எது என்னில்; ஸகல சேதநாசேதனங்களும் ஸர்வேச்வரனுக்கே சேஷம் (ஆட்பட்டவை) என்கிற விலக்ஷணமான அர்த்தத்தை நிலைநாட்டினார் என்கிறார்.

(கற்பகம்—வள்ளல்)

நாட்டிய நீசச்சமயங்கள் மாண்டன *நாரணனைக்
காட்டியவேதம் களிப்புற்றது *தென்குருகைவள்ளல்
வாட்டமிலா வண்தமிழ்மறை வாழ்ந்தது மண்ணுலகில்
ஈட்டியசீலத்து *இராமா நுசன் தன் இயல்வுகண்டே. 54

இப்படி எம்பெருமானார் உண்மையான தத்வத்தை ஸ்தாபனம் பண்ணியருளின ஸ்வபாவத்தைக் கண்டு பாஹ்ய ஸமயங்களுக்கும் வேதத்துக்கும், திருவாய்மொழிக்கும் உண்டான ஆகாரங்களை யருளிச் செய்கிறார். எம்பெருமானார் பாஹ்யகுத்ருஷ்டிமதங்களை மாளச் செய்ய ஒரு முயற்சியும் எடுத்துக்கொள்ளவில்லை. இவர் பார்த்தார். பார்த்த இயல்பைக்கண்டு அவை மாண்டன. தங்களின் உள்ளுறை பொருளை யதார்த்தமாகச் சொன்னதால் வேதங் களும், வேதஸாரமான தமிழ்மறைகளும் (அருளிச்செயல்கள்) பொலிவு பெற்ற ஓங்கின.

கண்டவர் சிந்தைகவரும் கடிபொழில் தென்னரங்கன்*
தொண்டர்குலாவு மிராமா நுசனை *தொகையிறந்த
பண்டருவேதங்கள் பார்மேல் நிலவிடப் பார்த்தருளும்
கொண்டலைமேவித்தொழும் *குடியாம்எங்கள்கோக்குலமே. 55

எம்பெருமானாரின் இயல்புகண்டு வடமொழி தென்மொழி வேதங்கள் வாழ்ச்சிபெற்ற தென்றார் கீழே. இப்படித்தாமே தம்பணியாக ஸகலவேதங்களும் இவ்வுலகத்தில் நிஷ்கண்டக மாக நடக்கும்படி பண்ணின ஔதார்யத்திலே ஈடுபட்டு, ஸ்வாமியை ஆச்ரயித்திருக்கும் குடி தம்மையாள உரியகுடி என்கிறார் இதில். எழில்வாய்ந்த திருவரங்கத்தில் வாழும் பெரிய பெருமாளுடைய தொண்டர்களால் கொண்டாடப்பட்டவரும், வேதங்களை இப்பூமியிலே ஓங்கி வளரச் செய்தருளிய பரம உதாரருமான எம்பெருமானாரை அடிபணிபவர்கள் தமக்கு (தமக்கும் தம்மைச் சேர்ந்தவர்களுக்கும்) ஸ்வாமிகள் ஆவார்கள்.

கோக்குலமன்னரை மூவெழுகால் *ஒருகூர்மழுவால்
போக்கியதேவனைப் போற்றும்புனிதன் *புவனமெங்கும்
ஆக்கியகீர்த்தி இராமா நுசனை யடைந்தபின் என்
வாக்குரையாது *என்மனம் நினையாதினி மற்றொன்றையே. 56

"கொண்டலைமேவித்தொழும் குலம் எங்கள் கோக்குலமே" என்றவரை சிலர் முன்பும் ஒவ்வொரு விஷயங்களில் பொருந்தி யிருந்தபோதும் அவ்வப்போது இப்படியே சொல்லிக் கொண்டு ஒரு நிலையில்லாமல் மாறிக்கொண்டு வந்தீர். இதுவும் அப்படியேயோ? என்று கேட்க, எம்பெருமானாரை ஆச்ரயித்த பின்பு என் வாக்கும் மனதும் இனி வேறு ஒரு விஷயத்தை அறியாதென்கிறார். பரசுராமனாய் அவதரித்து க்ஷத்ரியகுலத்தில் தோன்றிய அரசர்களை (கொடும் செயல் செய்ததுவந்ததுபற்றி) நாசம் பண்ணிய எம்பெருமானை ஏற்றிப் பரவும்பக்தராயும் தூயவராயும் உலகம் நிறைந்த புகழாளராகவும் விளங்குகின்றவர் என்று ஸ்வாமியின் பெருமையைப் பேசுகிறார்.

மற்றொருபேறு மதியாது *அரங்கன்மலரடிக்குஆள்
உற்றவரே தனக்குஉற்றவராக் கொள்ளுமுத்தமனை*
நற்றவர்போற்று மிராமநுசனை இந்நாநிலத்தே
பெற்றனன் *பெற்றபின் மற்றறியேன் ஒருபேதைமையே. 57

"இனி என் வாக்குரையாது—என் மனம் நினையாது" என்று எப்படி நீர் சொல்லக் கூடும்? இருள்தருமாஞாலத்தில் உள்ளவரை அஜ்ஞானம் வந்து சூழாதோ? என்று சிலர் கேட்க, எம்பெருமானாரை இவ்வுலகில் வந்தடைந்தபின் என் மனம் விவேகமின்றி மற்ற ஒன்றை அறியும்படி (விரும்பும்படி) ஆகவே ஆகாது என்கிறார். வேறொரு ப்ரயோஜனத்தைக் கருதாது அழகிய மணவாளனடியார்களான பாகவதோத்தமர்களைத் தமக்குப் பந்துக்களாகத் திருவுள்ளம்பற்றும் உத்தமரும், நல்லதவமுடையோர்களால் (ப்ரபன்ன ஜனங்களால்) போற்றப் படுபவருமான எம்பெருமானாரை இந்த நிலவுலகில் ஆச்ரயிக்கப் பெற்றேன். என்னைப் பேதைமை அணுகாது.

பேதையர்வேதப் பொருளிதென்றுன்னி *பிரமநன்றென்று
ஓதி மற்றெல்லாவுயிரும்அஃதென்று *உயிர்கள்மெய்விட்டு
ஆதிப்பரனோடொன் றாமென்றுசொல்லும் அவ்வல்லலெல்லாம்
வாதில்வென்றான் *எம்மிராமாநுசன் மெய்ம்மதிக்கடலே 58

கீழே பலபடிகளாலும் எம்பெருமானார் பாஹ்யமத நிரஸனம் (வேதங்களுக்குப் புறம்பான சமயங்களைக் கண்டிக்கை) பண்ணினபடிகளைப் பேசினார். இனி குத்ருஷ்டி (வேதங்களைப்ர மாணமாகக் கொண்டு தவறான அர்த்தம் கற்பிப்பவர்) நிரஸனஸாமர்த்யத்தைப் புகழ்ந்து பாடுகிறார். குத்ருஷ்டிகளான புத்திகேடர்கள், "இதுதான் வேதங்களின் உண்மைப் பொருள்: பரப்ரஹ்மமொன்றே உண்மை; அது தவிர (தோற்றும்) எல்லா ஜீவராசிகளும் அந்த ப்ரஹ்மமே; சரீரத்தை விட்ட ஜீவராசிகள் ஸர்வகாரணமான பரப்ரஹ்மத்தோடே ஐக்யமடை கின்றன" என்று சொல்லும் தவறான பொருள்களை (பிதற்றல்களை) வாதில் வென்று விசிஷ்டாத் வைத தத்வத்தை ஸ்தாபித்தருளினார்.

கடலளவாய திசையெட்டினுள்ளும் *கலியிருளே
மிடைதருகாலத்து இராமாநுசன் *மிக்கநான்மறையின்
சுடரொளியால் அவ்விருளைத்துரந்திலனேல் உயிரை
யுடையவன் *நாரணனென்றறிவாரில்லை யுற்றுணர்ந்தே. 59

எம்பெருமானார் இப்படி குத்ருஷ்டிநிரஸனம் செய்யாவிடிலும் ப்ரமாணங்களை ஆராய்ந்து உலகத்தவர்கள் ஸர்வேச்வரனே ஸர்வஸ்வாமி என்று அறியகில்லார்களோ? என்று சிலர் வினவ பதில் சொல்லுகிறார். கடல்களை எல்லையாகக் கொண்ட இப்பரந்த வுலகில் எல்லா இடங்களிலும் கலிகோலாஹலத்தால் அஜ்ஞானமான இருள் மண்டிக் கிடக்கையில் எம்மண்ணல் இராமாநுசன் வந்து தோன்றி நான்கு வேதங்களின் ஒளியான நன்ஞான விளக்கேற்றி கலியிருளை ஒழித்திராவிட்டால் ஸகல ஜீவாத்மாக்களுக்கும் சேஷி (ஜீவாத்மாக்கள் உடைமைகள்; ஈச்வரன் உடையவன்—ஸ்வாமி) ஸ்ரீமந் நாராயணனே என்று யாரும் நிச்சயித்து அறியகில்லார்கள்.

உணர்ந்தமெய்ஞ்ஞானியர் யோகந்தொறும் *திருவாய்மொழியின்
மணந்தருமின்னிசை மன்னுமிடந்தொறும் * மாமலராள்
புணர்ந்தபொன்மார்பன் பொருந்தும்பதிதொறும் புக்குநிற்கும்
குணந்திகழ்கொண்டல் *இராமாநுசனெம் குலக்கொழுந்தே. 60

எம்பெருமானாருடைய ஞானவைபவத்தைப்பேசினார் கீழே; பக்தி வைபவத்தைப்பேசு கிறார் மேலே. ஆத்மகுணபூர்த்தியால் ப்ரகாசிப்பவராய், காளமேகம் போல பரமஉதாரராய், எங்கள் (ப்ரபன்ன) குடிக்குத் தலைவராய் உள்ள எம்பெருமானார், உண்மை நன்ஞானம்

கைபுகுந்த தத்வஜ்ஞர்கள் கோஷ்டிகளிலும், (மகிழமலரின்) மணம் மிக்க திருவாய்மொழியின் இனிய இசை கேட்குமிடங்களிலும், ச்ரிய :பதியான எம்பெருமான் உகந்தருளி வர்த்திக்கும் திவ்ய தேசங்களிலும் எழுந்தருளியிருப்பர். திருவாய்மொழி பாடுமிடங்களிலும் திவ்யதேசங்களிலும் ஆசையுடன் புக்கு அவற்றிலே ஆழங்கால் பட்டு நில்லாநிற்பர் ஸ்வாமி. இது பக்தி வைபவமிருக்கும் படி.

தொழுந்துவிட்டோடிப்படரும் வெங்கோள்வினையால் *நிரயத்
தழுந்திவிட்டேனை வந்தாட்கொண்டபின்னும் *அருமுனிவர்
தொழும்தவத்தோன்எம்மிராமாநுசன் தொல்புகழ்சுடர்மிக்கு
எழுந்தது *அத்தால்நல்லதிசயம் கண்டதிருநிலமே. 61

குணந்திகழ் கொண்டல் என்றார் கீழே. குணவைபவமிருக்கும்படியை யருளிச்செய்கிறார் இங்கு. ''எல்லாம் கண்ணன்'' என்கிறபடியே நமக்கு ஸகலமும் எம்பெருமான் என்று ஒழுகும் அருமுனிவர் தொழும்படியுள்ளவரும், ப்ரபத்தியான மஹாதபஸ்ஸையுடையராய் எனக்கு ஸ்வாமியுமான எம்பெருமானாருடைய கல்யாணகுணங்கள், மேல்மேலும் தலைபெற்று அதிசீக்ரமாய் விஸ்தாரமடைவதாய், கொடியதாயுள்ள ப்ரபலமான கர்மங்களாலே ஸம்ஸாரமாகிற நரகத்தில் அழுந்திக் கிடந்த என்னை நான் இருக்குமிடத்திலே வந்து ஆட்கொண்டன; நீசனான அடியேனிடம் கலசியும் ஸ்வாமிகுணங்கள் விசேஷமாக ப்ரகாசிக்கின்றன. என்ன ஆச்சரியம் இந்த நிலவுலகில்!

இருந்தேனிருவினைப்பாசம்கழற்றி *இன்றுயான் இறையும்
வருந்தேனினி எம்மிராமாநுசன் *மன்னு மாமலர்த்தாள்
பொருந்தா நிலையுடைப்புன்மையினோர்க்கொன்றும் நன்மை செய்யாப்
பெருந்தேவரைப்பரவும் *பெரியோர்தம் கழல்பிடித்தே. 62

தம்முடைய கர்மஸம்பந்தமறப் பெற்றதால் க்ருதார்த்தரானமையைச் சொல்லுகிறார். எப்போதும் பெரிய பெருமாளைப் போற்றித் துதிப்பவரும், நம்ஸ்வாமீ எம்பெருமானாருடைய இணைந்த திருவடித்தாமரைகளிலே அன்பொன்றில்லாத நீசர்கள்பால் ஸ்நேஹலேசமுமில்லாதவர்களுமான கூரத்தாழ்வான் போன்ற மஹாநுபாவர்களுடைய திருவடிகளில் ஆச்ரயித்து புண்ணியபாபங்களாகிற இருவகைக் கர்மபந்தங்களினின்றும் விடுபட்டவனான அடியேன் இறையும் (சிறிது அளவும்) வருந்தமாட்டேன்; அன்றியே, எம்பெருமானார் திருவடி ஸம்பந்தமில்லாதவருக்கு ஒரு நன்மையும் செய்யேன் என்று திருவுள்ளம் பற்றியுள்ள பெரிய பெருமாள் என்றும் அந்வயிக்க அமையும்

பிடியைத்தொடரும் களிறென்ன *யானுன்பிறங்கியசீர்
அடியைத்தொடரும்படி நல்கவேண்டும் *அறுசமயச்
செடியைத்தொடரும் மருள்செறிந்தோர்சிதைந்தோட வந்துஇப்
படியைத்தொடரும் *இராமாநுசா! மிக்கபண்டிதனே! 63

அநிஷ்டமான கர்மஸம்பந்தமறுந்தபடியைச் சொன்னார் கீழே. இஷ்டப்ராப்தியான எம்பெருமானார் திருவடிகளில் கைங்கர்யத்துக்கு அத்திருவடிகளில் அன்பு பூண்டொழுகும் படியான நிலையை அருளும்படி ஸ்வாமியையே வேண்டுகிறார். வேதபாஹ்யமான ஆறுசமயம் என்ற புதரில் அகப்பட்டுக் கொள்ளும்படி புத்தி கேடரான மூடர்கள் சிதைந்து ஓடும்படியாக வந்து அவதரித்தவரும் அடியோங்களை விஷயீகரிப்பதற்காகப் பின்தொடர்கின்றவரும்,நிரவதிக ஞானம் படைத்தவருமான ஸ்வாமியே! பிடியை (பெண் யானையை) அதன் மேலுள்ள காதலால் விடாமல் தொடரும் களிறு (ஆண்யானை) போல ஸௌந்தர்யாதி குணங்களால் பிரகாசிக்கும் தேவரீருடைய சரணாரவிந்தங்களில் அடியேனுக்கு என்றும் மாறாத பக்தியை தேவரீரே ப்ரஸாதிக்க வேண்டும்'

பண்டருமாறன் பசுந்தமிழ் *ஆனந்தம்பாய்மதமாய்
விண்டிட எங்களிராமாநுசமுனிவேழம் *மெய்ம்மை
கொண்டநல்வேதக்கொழுந்தண்டமேந்திக் குவலயத்தே
மண்டிவந்தேன்றது *வாதியர்காள்! உங்கள்வாழ்வற்றதே. 64

"அறுசமயச் செடியைத் தொடரும் மருள் செறிந்தோர் சிதைந்தோடவந்து" என்று பாஹ்யர்களைச் சிதைத்தற்காக எம்பெருமானார் எழுந்தருளியதைச் சொன்னார் கீழே. ப்ரதி பக்ஷிகளான பாஹ்யகுத்ருஷ்டிகளை நோக்கி உங்கள் வாழ்வு இனிப்போயிற்றென்கிறார். துர்வாதங்களைப் பண்ணும் புறச்சமயிகளே! எங்களுக்கு விதேயமாயிருக்கும் ராமாநுசனென்னும் மதயானையானது "பண்ணார்பாடல்" என்னும்படி நம்மாழ்வார் பாடி உபகரித்தருளின இன்புறும் செந்தமிழ்க்கவிகளான திருவாய்மொழியால் (அதை அநுஸந்திப்பதால்) விளைந்த ஆநந்தமாகிற மதம் ஒழுகா நிற்க, ஸத்யவாதியான வேதமென்கிற பெரிய தண்டத்தை (தடியை) ஏந்திக்கொண்டு உங்கள்பாடே வந்து கொண்டிருக்கிறது. இனி நீங்கள் பிழைக்க வழியில்லை —என்கிறார். (ப்ரதிபக்ஷிகளாகிற கேட்டினின்றும் உலகம் பிழைத்தது என்கிறபடி)

வாழ்வற்றது தொல்லைவாதியர்க்கு *என்றும்மறையவர்தம்
தாழ்வற்றது தவம்தாரணிபெற்றது *தத்துவநூல்
கூழற்றது குற்றமெல்லாம்பதித்தகுணத்தினர்க்கு அந்
நாழற்றது *நம்மிராமாநுசன்தந்த ஞானத்திலே. 65

இப்படி எழுந்தருளின எம்பெருமானார் பாஹ்யகுத்ருஷ்டிகளை வெல்லும்படி அருளின ஞானத்தால் பலித்தவைகளைச் சொல்லுகிறார். நம் ஸ்வாமியான எம்பெருமானார் தம் உபதேசங்களாலும் ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களாலும் உபகரித்தருளின ஞானத்தினால் நெடுங்காலம் துர்வாதம் பண்ணிவந்த பாஹ்யகுத்ருஷ்டிகளுடைய வாழ்வு அற்றது (அவர்கள் மதம் அழிந்தது). பயிருடன் எழும் புற்பூண்டான களையை அகற்றவே, பயிர் ஓங்கி வளருமாப்போலே துர்வாதிகள் ஒழிய, வைதிகர்கள் குறையற்றவர்களாக ஆனார்கள். பாகவதர்கள் ஸஞ்சரிப்பதால் இப்பூவுலகம் வாழ்ச்சியடைந்தது; உண்மைத் தத்துவங்களைத் தெரிவிக்கும் சாஸ்த்ரங்கள் ஸந்தேஹமற நிச்சயமான பொருளைத் தெரிவிப்பவையாயின. லோகத்தவரும் குற்றமற்ற நல்பினராயினர். இது ஒரு ஞான வைபவமிருந்தபடி என்! என்று ப்ரீதராகிறார்.

ஞானம்கனிந்த நலங்கொண்டு *நாடொறும்நைபவர்க்கு
வானம்கொடுப்பது மாதவன் *வல்வினையேன்மனத்தில்
ஈனம்கடிந்தவிராமாநுசன் தன்னையெய்தினர்க்குஅத்
தானம்கொடுப்பது *தன்தகவென்னும் சரண்கொடுத்தே. 66

எம்பெருமானாருபகரித்த ஞான வைபவத்தைக் கீழே அருளிச் செய்து இதில் அவருடைய மோக்ஷப்ரதான வைபவத்தையருளிச் செய்கிறார். ச்ரிய: பதியான ஸர்வேச்வரன் மோக்ஷம் கொடுப்பது, ஞானம் பக்திரூபமாகி அது கனிந்து (பழுத்து) அதனால் எப்போதும் நெஞ்சுருகி நிற்பவருக்கேயாம். மஹாபாபியான அடியேன் மனதிலுள்ள மாசையெல்லாம் போக்கிய எம்பெருமானார் தம்மை ஆச்ரயித்தவர்களுக்கு விண்ணாடு (பரமபதமான மோக்ஷம்) அளிப்பது தம்முடைய க்ருபையாலே. (மோக்ஷஸாம்ராஜ்யம் எம்பெருமானாரிட்ட வழக்காயிருக்கும்படி எம்பெருமானருள் இவரிடம் தேங்கியுள்ளமையால் உடையவரும் மோக்ஷமளிக்க வல்லவர் என்றபடி).

சரணமடைந்த தருமனுக்கா *பண்டுநூற்றுவரை
மரணமடைவித்த மாயவன் *தன்னை வணங்கவைத்த
கரணமிவை உமக்கன்றென்றிராமாநுசன் உயிர்கட்கு
அரணங்கமைத்திலனேல் *அரணார் மற்றிவ்வாருயிர்க்கே. 67

எம்பெருமானாருடைய ஞானப்ரதத்வ மோக்ஷப்ரதத்வ ஸாமர்த்யத்தை யருளிச் செய்தார் கீழே. எம்பெருமானை அடைவதற்கென்று தரப்பட்ட அவயவங்களை விஷயாந்தரங்களில் விஞக்காமல் தம் உபதேசமுகத்தால் நியமித்து நம்மை ரக்ஷித்திலரேல் இவ்வாத்மாவுக்கு வேறு யாரும் ரக்ஷகரில்லை என்கிறார்.

தன்னைப் புகலாகப்பற்றிய தருமனுக்காக, கௌரவர்கள் நூற்றுவரையும் "கொல்லாமாக் கோல் கொலை செய்து" என்கிறபடியே மரணமடையும்படி ஸங்கல்பம் பண்ணியருளின எம்பெருமான் தன்னைவணங்குவதற்கென்று இந்த்ரியங்களுடன் கூடிய இந்த உடலைக் கொடுத்தான்; உங்களிஷ்டப்படி ஸுகமநுபவிப்பதற்கல்ல என்று எம்பெருமானார் உபதேசித்து நம்மைக்காக்கவே நாம் எம்பெருமானை வணங்கி வாழும்படியாயிற்று. இல்லையேல் நமக்குக் காப்பாராரினியே?

ஆரெனக்கின்று நிகர்சொல்லில் *மாயனன்றைவர் தெய்வத்
தேரினில் செப்பிய கீதையின்செம்மை *பொருள்தெரியப்
பாரினில் சொன்ன விராமாநுசனைப் பணியும் நல்லோர்
சீரினில் சென்றுபணிந்தது *என்ஆவியும் சிந்தையுமே. 68

"பார்த்தம் ரதிநம் ஆத்மாநம் ஸாரதிம் ஸர்வலோகஸாக்ஷிகம் சகார" என்கிறபடியே பார்த்தஸாரதியாய், தன்னடியார்க்கு அடிமைசெய்த ஆஸ்சர்யபூதனான எம்பெருமான் அன்று தெய்விகமான திருத்தேர்த்தட்டிலிருந்து அருளிச்செய்த மெய்ம்மைப்பெருவார்த்தையின் சீரியபொருள்களை (அர்ஜுனனொருவனுக்காக அன்று சொல்லப்பட்டதை) இன்று உலகத்தவர் எல்லாருமறிந்து வாழும்படி உபதேசித்தருளிய எம்பெருமானாரை அடிபணியும் ஸத்துக்களுடைய கல்யாணகுணங்களில் என் ஆவியும் சிந்தையும் படிந்து விட்டன. எனக்கு ஒப்பவர் இவ்வுலகில் உண்டோ?

சிந்தையினோடுகரணங்கள் யாவும்சிதைந்து *முன்னாள்
அந்தமுற்றாழ்ந்ததுகண்டு *அவையென்தனக்கன்றருளால்
தந்த வரங்களும் தன்சரண்தந்திலன் தானதுதந்து*
எந்தையிராமாநுசன் வந்தெடுத்தனின்றென்னையே. 69

எம்பெருமானார் திருவடிகளில் பணிந்தவர் விஷயத்தில் தமக்குள்ள ப்ராவண்யத்தைச் சொன்னவர் எம்பெருமான் தமக்குப் பண்ணின உபகாரத்தைச் சொல்லுகிறார். ஸ்ருஷ்டி காலத்துக்கு முன்பு (ப்ரளய காலத்தில்), மனதும் மற்ற இந்திரியங்களும் அழிந்து அசித்தோடே ஒன்று என்னலாம்படி ஒன்றிக்கிடந்தபடி கண்டு, ஆத்மாவைப் பிரித்தெடுத்து உடலையும் இந்த்ரியங்களையும் தன்க்ருபையாலே தந்து உபகரித்த பெரியபெருமாளும் தன் திருவடிகளைக் காட்டித் தந்து வாழ்விக்கவில்லை; எம்பெருமானார் என்னை வாழ்விக்க என்று வந்து, "அரங்கன் செய்தாளிணையோடு ஆர்த்தான்" என்னும்படி அந்தத்திருவடிகளைத் தஞ்சமாகக் காட்டி வாழ்வித்தனர்.

என்னையும்பார்த்தென்னியல்வையும்பார்த்து *எண்ணில் பல்குணத்த
உன்னையும்பார்க்கில் அருள் செய்வதேநலம் *அன்றியென்பால்
பின்னையும்பார்க்கில்நலமுளதே உன்பெருங்கருணை
தன்னை என்பார்ப்பர்? *இராமாநுசா! உன்னைச்சார்ந்தவரே. 70

எம்பெருமானார் செய்தருளின உபகாரத்தை நினைந்து உருகினவர் ஸ்வாமிதிருமுகத்தைப் பார்த்து இதை விண்ணப்பம் பண்ணுகிறார்: ஸ்வாமிந்! நன்மையேதுமில்லாமல் தீமையே உருவான என்னையும் என் இயல்பையும் நோக்கி, எண்ணுக்கு அடங்காத பல கல்யாண குணங்களுடைய தேவரீரையும் நோக்குமளவில், தேவரீருடைய நிர்ஹேதுக க்ருபைக்கு அடியேனை விஷயமாக்குவதே நலம். இப்போதுபோல் எப்போதும் அடியேனை

நிர்ஹேதுக க்ருபையால் ரக்ஷித்தருள வேண்டும். ஆராய்ந்து பார்த்தால் என்னிடம் தகுதி என்னக்கூடிய நலன் ஒன்றுமே இல்லை. அருள்செய்ய என்பால் நலன் வேண்டினுல் (தேவை யிட்டால்) தேவரீருடைய அடியார்கள் தேவரீருடைய பெருங்கருணைக்கு இழுக்காக நினையார்களோ? "நின் சாயையழிவு கண்டாய்" என்றபடி.

சார்ந்ததென்சிந்தை உன்தாளிணைக்கீழ் *அன்புதான்மிகவும்
கூர்ந்தது அத்தாமரைத்தாள்களுக்கு *உன்தன்குணங்களுக்கே
தீர்ந்ததென்செய்கை முன்செய்வினை நீசெய்வினையதனல்
பேர்ந்தது *வண்மையிராமாநுசா! எம்பெருந்தகையே! 71

இவர் விண்ணப்பத்தைச் செவியுற்ற எம்பெருமானாரும் இசைந்து தம்முடைய விசேஷ கடாக்ஷத்தினுல் இவருடைய ஞானத்தைத் தம் விஷயத்திலேயூன்றும்படி மலர்த்தியருள, தாம்பெற்ற பேறுகளைப் பேசுகிறார் பரம ஔதார்ய குணம் படைத்தவராய் அதனல் எழுதிக்கொண்ட பெருந்தகையான ஸ்வாமின்! என்னுடைய நெஞ்சு தேவரீர் திருவடிகளில் பொருந்திவிட்டது; பரம போக்யமான அந்தத் திருவடிகளில் அடியேனுக்கு பக்தி பெருகாநின்றது; என்னுடைய வ்ருத்தி (கார்யங்கள்) தேவரீருடைய குணங்களுக்கே அற்றுத் தீர்ந்தது; அடியேன் சேமித்து வைத்திருந்த பாபங்கள் எரிந்து போயின. எனக்கு ஒரு குறையுமில்லை.

கைத்தனன் தீயசமயக்கலகரை *காசினிக்கே
உய்த்தனன் தூயமறைநெறிதன்னை *என்றுன்னியுள்ளம்
நெய்த்தவன்போடிருந்தேத்தும் நிறைபுகழோருடனே
வைத்தனனென்னை *இராமாநுசன்மிக்கவண்மைசெய்தே. 72

எம்பெருமானாரின் ஔதார்யத்தாலே தாம் பெற்ற பேறுகளைப் பேசி க்ருதார்த்தரானார் கீழ்; இன்னமும் தமக்குச் செய்கிற பேருதவிகளை நினைத்து உருகுகிறார்; துர்வாதிகளுடைய துஷ்டமதங்களை எல்லாம் அழித்து மறைநெறியை (வேதவர்க்கத்தை) நிலைநாட்டியருளினார் நம்ஸ்வாமி; இந்த வைபவத்தில் ஈடுபட்டு உள்ளம் கனிந்திருக்கும் மஹான்களோடே அடியேனும் ஒருவன் என்று எண்ணலாம்படி ஆக்கியருளினார். இது ஒரு மஹோபகாரம் [illegible]த்தபடியே! என்று உருகுகின்றார். அல்லது—அஸத்துக்கள் நடுவே கிடந்த என்னை அடியரோடிருந்தமை" என்கிறபடி ஸ்ரீ வைஷ்ணவர்கள் நடுவே வாழும்படி பண்ணியருளினார் என்னவுமாம்.

வண்மையினுலும் தன்மாதகவாலும் *மதிபுரையும்
தண்மையினுலும் இத்தாரணியோர்கட்கு *தான்சரணுய்
உண்மைநன்ஞான முரைத்த விராமாநுசனை யுன்னும்
திண்மையல்லாலெனக்கில்லை *மற்றோர்நிலை தேர்ந்திடிலே. 73

தம்முடைய ஔதார்யாதி கல்யாண குணங்களினாலே இவ்வுலகத்தவர்க்குத்தாமே ரக்ஷகராய் உண்மை நன்ஞானமளித்த எம்பெருமானாரைப்போற்றுவது தவிர்த்து வேறு தரிப்பு இல்லை என்கிறார். தம்முடைய பரம க்ருபையாலும் வள்ளல்தனமான ஔதார்யத்தாலும், சந்திரனையொத்த திருவுள்ளக்குளிர்ச்சியாலும் இப்பூவுலகத்தவர்களுக்கு ரக்ஷகராய் நல்லுபதேசங்களையருளிய எம்பெருமானாரை அநவரதமும் சிந்திப்பதில் உறுதியுள்ளவனுயிராநின்றேன்.

தேரார் மறையின்திறமென்று *மாயவன்தீயவரைக்
கூராழிகொண்டுகுறைப்பது *கொண்டலனையவண்மை
ஏரார்குணத்தெம்மிராமாநுசன் அவ்வெழில்மறையில்
சேராதவரைச்சிதைப்பது *அப்போதொருசிந்தைசெய்தே. 74

கீழே சொன்ன உண்மை நன்ஞானத்துக்கு விரோதிகளான வேதபாஹ்யர்களையும் குத்ருஷ்டிகளையும் அழியும்படி செய்த ப்ரகாரம் ஸர்வேச்வரனை விட ஆயாஸமின்றியே செய்தருளுவதே! என்று நைகிறார். தன்னுடைய சாஸனரூபமான வேதம் சொல்வது இது என்று நிரூபித்தறியாமல் (அதன்படி நடவாமல்) தவறான பொருள்கூறி துர்நடத்தையில் உழலும் குத்ருஷ்டிகளையும் வேதத்தைப்ரமாணமாகவே கொள்ளாத பாஹ்யர்களையும் அழிக்க எம்பெருமான் கூரிய திருவாழியைக் காரியம் கொள்ளுகிறான். ஸமஸ்தகல்யாண குணங்களையுடையவரான—குறிப்பாக (பிறர்க்குதவித்தன்னையே யழித்துக்கொள்ளும்) மேகம்போன்ற ஔதார்ய குணமுடைய—எம்பெருமானுர் இந்த பாஹ்யகுத்ருஷ்டி நிரஸனம் பண்ணுவது அவர்களுடைய வாதங்களைத் தம் சிந்தனு ஸாமர்த்யத்தினால் களைந்தொழித்துவிடுவதினால்.

செய்த்தலைச்சங்கம் செழுமுத்தமீனும் *திருவரங்கர்
கைத்தலத்தாழியும் சங்கமுமேந்தி *நங்கண்முகப்பே
மொய்த்தலைத்துன்னைவிடே னென்றிருக்கிலும்நின்புகழே
மொய்த்தலைக்கும்வந்து *இராமாநுசா! என்னைமுற்றுநின்றே. 75

தேவுமற்றறியேன் என்ற நிலை தமது என்கிறார். [வயல்களில் சங்குகளானவை அழகிய முத்துக்களை உண்டாக்குமிடம் திருவரங்கம்; இத்தன்மையதான திவ்யதேசத்துக்கு நாதன் ஸ்ரீரங்கநாதன் அந்த] எம்பெருமான் (ஸ்ரீரங்கநாதன்) கூரா ராழி வெண்சங்கேந்தி எதிரேவந்து தன்னைக் காட்டி, தன்னழகாலே தன்னிடம் ஈடுபடுத்திக்கொண்டு "உன்னை விடேன்" என்று ப்ரதிஜ்ஞை பண்ணி; நின்றவிடத்தைவிட்டுப் பெயராமல் நின்றாலும், ஸ்வாமிந்! (எம்பெருமானுரே) தேவரீருடைய குணங்களே என்னை ஈடுபடுத்திக் கொள்ளும்; பகவத் வைலக்ஷண்யம் கண்டு அதில் தோள் மாறக்கடவேன்.

**நின்றவண்கீர்த்தியும் நீள்புனலும் *நிறைவேங்கடப்பொற்
குன்றமும்வைகுந்தநாடும் குலவியபாற்கடலும்*
உன்றனக்கெத்தனையின்பந்தரும், உன்னிணைமலர்த்தாள்
என்றனக்குமது *இராமாநுசா! இவையீந்தருளே. 76

பகவத் வைலக்ஷண்யத்தை நேரில் கண்டாலும் தேவரீரையொழிய வேறு அறியேன் (தெய்வமாகக் கொள்ளேன்) என்றதைக்கேட்ட எம்பெருமானுர் மிகவும் உகந்து இவருக்கு என் செய்வோம்? என்றுள்ளதாகக் கண்ட அமுதனுர், "ஸ்வாமீ எம்பெருமானுரே! அடியேனுக்கு வேறொன்றும் வேண்டா; தேவரீருடைய இணைமலர்த்தாள் (திருவடிகள்) களையே ப்ரஸாதித்தருளவேண்டும் என்று ப்ராப்யநிஷ்கர்ஷம் பண்ணி வேண்டிக் கொள்ளுகிறார். பெரும்புகழ் படைத்த திருவேங்கடமென்னும் திருமலை, ஸ்ரீவைகுண்டமான திருநாடு, அவன் விரும்பியுறையும் பாற்கடல் இவை தேவரீருக்கு எவ்வளவு இன்பம் தருமோ அவ்வளவு இன்பம் எனக்கு தேவரீருடைய திருவடிகள் பயக்கும். அவற்றையே ப்ரஸாதித்தருள வேண்டும் என்கிறார்.

ஈந்தனனீயாதவின்னருள்*எண்ணில்மறைக்குறும்பைப்
பாய்ந்தனன் அம்மறைப்பல்பொருளால் *இப்படியனைத்தும்
ஏய்ந்தனன்கீர்த்தியினுல் என்வினைகளை வேர்பறியக்
காய்ந்தனன் *வண்மையிராமாநுசற்கென் கருத்தினியே. 77

தாம் வேண்டியபடியே திருவடித்தாமரைகளைக் கொடுத்தருளப்பெற்று அவர் செய்த உபகாரங்களை நினைந்து இவையனைத்தும் செய்து இன்னும் செய்வதாக நினைத்தருளுவது ஏதோ? என்கிறார். இதற்கு முன்பு ஒருவர்க்குமே உபகரியாதபடி விலக்ஷணமான அருளை அடியேன்பால் ஈரந்தார். எண்ணிறந்த வேத விரோதிகளை அம்மறையின் உட்பொருள் கொண்டே கண்டித்தார். பூமியெங்கும் தம்கீர்த்தி விளங்கும்படி வ்யாபித்தார். என் பாபங்

களை வேரோடு அறும்படி ஒழிக்கும் பரம உதாரரான எம் ஸ்வாமிக்கு இன்னும் என்செய்ய வேண்டுமெனத் திருவுள்ளமோ? (ஏய்ந்த வண் கீர்த்தியினால் என்றும் பாடமுண்டு. அப்படியாகில் ஸ்வாமியோடு ஸம்பந்தமுள்ளவனன்றோ இவன் என்று பாபங்கள் தாமே அகன்று போம் என்று பொருள்தேறும்).

கருத்தில்புகுந்துள்ளில்கள்ளம்கழற்றி *கருதரிய
வருத்தத்தினால் மிகவஞ்சித்து *நீ யிந்தமண்ணகத்தே
திருத்தித்திருமகள்கேள்வனுக்காக்கியபின் என்னெஞ்சில்
பொருத்தப்படாது *எம்மிராமாநுச! மற்றோர்பொய்ப்பொருளே. 78

இப்படி ஸ்வாமி பண்ணிய உபகாரங்களைச் சொல்லியபிறகு, தம்மைத் திருத்துகைக்காக அவர் பட்ட பாட்டையெல்லாம் சொல்லி, இப்படி அடியேனைத் திருத்தித் திருமகள் கேள்வனுக்கடியனாக்கியபின் வேறு எதிலும் என்நெஞ்சு பொருந்ாதென்கிறார். தூர இருந்து திருத்தப்போகாதென்று என்நெஞ்சில் வந்து புகுந்து அதிலுள்ள மாசுகளைப்போக்கி, தரிசை விளைநிலமாக்குவார்போலே செய்காலாக்கி, தேவரீருக்கு உத்தேச்ய விஷயமான ச்ரிய:பதிக்கு அந்தரங்க கைங்கர்யத்துக்கும் தகுதியுள்ளவனாகத் திருத்திப்பணி கொண்டபின்னர் அடியேன் மனத்தில் தேவரீர் அறிவித்த உண்மைப் பொருளன்றி அதற்குப்புறம்பான பொய்ப் பொருள் ஒன்றும் நிலைபெறாது.

பொய்யைச்சுரக்கும் பொருளைத்துரந்து *இந்தப்பூதலத்தே
மெய்யைப்புரக்கும் இராமாநுசன்நிற்க *வேறுநம்மை
உய்யக்கொள்ளவல்லதெய்வமிங்கியாதென்று உலர்ந்து; அவமே
ஐயப்படாநிற்பர் *வையத்துள்ளோர் நல்லறிவிழந்தே 79

எம்பெருமானார் உண்மை நன்ஞானத்தைக் கொடுக்கையாலே பொய்நின்ற ஞானம் தமக்குப் பொருந்ாதென்றார் கீழே. உஜ்ஜீவநருசியுண்டாகப் பெற்றவர் இந்த ஞானத்தையிழந்து இவ்விஷயத்துக்கு அசலாய்ப்போருகிற படியைக் கண்டு வருந்துகிறார் இங்கு. இந்நிலவுலகில் பொய்யான அர்த்தங்களையே ப்ரசாரம் செய்யும் புறமதத்தவர்களைக் கண்டித்து ஸத்யத்தை ரக்ஷிக்கும் எம்பெருமானார் யாரொருவர் வருவார் என்று எதிர்நோக்கி இருக்கச் செய்தே, இவரைவிட்டுவிட்டு நம்மை வாழ்விக்க வல்ல தெய்வம் எது என்று நல்ல ஞானத்தைப் பெறாமல் (இழந்து) உழல்கின்றனரே! அந்தோ பரிதாபம்!

நல்லார்பரவுமிராமாநுசன் *திருநாமம்நம்ப
வல்லார்திறத்தை மறவாதவர்கள்யவர் *அவர்க்கே
எல்லாவிடத்திலுமென்றுமெப்போதிலுமெத்தொழும்பும்
சொல்லால்மனத்தால் *கருமத்தினால்செய்வன் சோர்வின்றியே. 80

ஸ்வாமியை ஆச்ரயிக்காத ஸம்ஸாரிகள் நிலைகண்டு இழவுபட்டவர் இவ்விஷயமே உத்தேச்யம் என்றிருப்பாரை உத்தேச்யரென்றிருக்குமவர்க்கே ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி அடிமை செய்வேனென்கிறார். நல்லார் நவில் குருகூர்நகரான் என்னுமா போலே ஸத்துக்களெல்லாம் ப்ரேம பரவசராய்க் கொண்டாடும் எம்பெருமானாருடைய திருநாமத்தைத் தங்களுக்குத் தஞ்சமாக நம்பியிருக்கும் மஹான்களையே எப்போதும் சிந்தித்திருக்கும் ராமாநுசனடியார்களுக்கே அடியேன் எல்லாக் காலத்திலும் எல்லா இடத்திலும் எல்லாப் படியாலும் அயராமல் அடிமை செய்வேன்.

சோர்வின்றிஉன்தன் துணையடிக்கீழ் *தொண்டுபட்டவர்பால்
சார்வின்றிநின்றவெனக்கு *அரங்கன்செய்ய தாளிணைகள்
பேர்வின்றியின்று பெறுத்துமிராமாநுச! இனியுன்
சீரொன்றியகருணைக்கு *இல்லைமாறு தெரிவுறிலே. 81

எம்பெருமானாருடைய கருணைக்கு ஒப்பேயில்லை என்கிறார். சோர்வில்லாமல் தேவரீர் இணையடிகளுக்குப் பணிவிடை செய்யும் மஹான்கள் பக்கலில் ஒரு ஸம்பந்தமுமில்லாமல் இருந்த எனக்கு அவர்கள் திறத்து "அடியார்க்கென்னையாட்படுத்த விமலன்" என்கிறபடியே, அடியேனைத்திருத்தி, பாகவத சேஷத்வத்தில் நிலையில்லாதவர்க்குத் தம்திருவடிகளைத் தராத ஸ்ரீரங்கநாதனின் செந்தாமரையடிகளை நான் என்றும் பிரியாதபடி என்தலைக்கு அணியாய் அடையும்படி செய்த ஸ்வாமிந்! ஆராய்ந்து பார்க்கில் தேவரீருடைய மேலான திருவருளுக்கு ஒப்பு ஏதுமில்லை.

தெரிவுற்றஞானம் செறியப்பெறாது *வெந்தீவினையால்
உருவற்றஞானத்து உழல்கின்றவென்னை *ஒருபொழுதில்
பொருவற்றகேள்வியனாக்கிநின்றான் என்ன புண்ணியனோ?
தெரிவுற்றகீர்த்தி *இராமாநுசனென்னும் சீர்முகிலே. 82

எம்பெருமானார் தமக்கருளிய உபதேச பரம்பரைகளை அநுஸந்தித்து உருகி என்ன தார்மிகரோ இந்த ஸ்வாமி! என்கிறார். இது நன்று, இது தீது என்ற பகுத்தறிய இல்லாமல் மிகக் கொடுவினை படைத்து, நின்றவாறில்லா நெஞ்சினையுடையேனாய் எங்கும் திரிந்து நின்ற என்னை ஒரு இமைப்பொழுதில் ஒப்பற்ற கேள்வியனாக்கி (பலநாள் கேட்டறிந்ததனால் பிறக்கும் தெளிவற்ற ஞானம் உள்ளவனாக்கி) யருளியவரும், பெரும்புகழ் படைத்தவரும், "குணந்திகழ் கொண்டல்" என்னும்படி பரம உதாரருமான எம்பெருமானார் என்ன புண்ணியனோ? (ஒப்பற்றதார்மிகர் என்றபடி).

சீர்கொண்டு பேரறம்செய்து *நல்வீடுசெறிதுமென்னும்
பார்கொண்டமேன்மையர் கூட்டனல்லேன் *உன்பதயுகமாம்
ஏர்கொண்டவீட்டை எளிதினிலெய்துவன் உன்னுடைய
கார்கொண்டவண்மை *இராமாநுசா! இதுகண்டுகொள்ளே. 83

நான் ப்ரபத்தி பண்ணி பரமபதம் பெறுவார் கோஷ்டியன் அல்லேன்; தேவரீர் திருவடிகளாகிற மோக்ஷத்தை தேவரீருடைய பரமக்ருபையாலே பெறுமவன் என்கிறார். சமம், தமம் முதலிய ஆத்மகுண பரிபூர்ணராய், உயர்ந்த தர்மமாகிற (அவனே கீதையிலுபதேசித்த) ப்ரபத்தியை அநுஷ்டித்து, நமக்கு பேறு ஸித்தம் என்றிருக்கும் பகவத்ப்ரபன்னருடைய திரளுக்குட்பட்டவனல்லேன். தேவரீருடைய திருவடிகளாகிற மோக்ஷத்தை மேகத்தினும் அதிசயித்த தேவரீருடைய ஔதார்யத்தின் பலத்தினால் ச்ரமமின்றியே பெறுவேன். இது நான் சொல்லத் தேவையில்லை.

கண்டுகொண்டேனெம்மிராமாநுசன்தன்னை *காண்டலுமே
தொண்டுகொண்டேனவன் தொண்டர்பொற்றாளில் *என்தொல்லைவெந்நோய்
விண்டுகொண்டேனவன் சீர்வெள்ளவாரியைவாய்மடுத்தின்று
உண்டு கொண்டேன் *இன்னமுற்றனவோதிலுலப்பில்லையே. 84

இனிமேலும் பெறவிருக்குமவை பலவுண்டாகிலும் இதுவரை பெற்றவைகளே எல்லையற்றவை என்கிறார். நம்மை உத்தரிப்பிக்க வந்தவதரித்தவர் என்று ஸ்வாமி எம்பெருமானாரை உள்ளபடி கண்டு கொண்டேன்; இப்படி அறிந்து, அவரோடு நின்றுவிடாமல் அவரடியார்களுடைய திருவடிகளில் அடிமைப்பட்டேன். இதனால் அநாதியாய்ச்சேர்ந்த என்கொடுவினைகள் களையப்பெற்றேன். அவருடைய கல்யாணகுணமாகிற கடலை என் வாயார அநுபவிக்கப் பெற்றேன். இன்னமும் நான் பெற்றவற்றைச் சொல்லப்புகில் அதற்கொரு முடிவேயிராது,

ஓதியவேதத்தினுட்பொருளாய் *அதனுச்சிமிக்க
சோதியைநாதனெனவறியாது உழல்கின்றதொண்டர்*
பேதைமைதீர்த்தவிராமாநுசனைத் தொழும்பெரியோர்
பாதமல்லாலென்தனுருயிர்க்கு *யாதொன்றும்பற்றில்லையே. 85

"கண்டுகொண்டேன்—அவன் சீர் வெள்ளவாரியை உண்டுகொண்டேன்" என்றும், "அவன் தொண்டர் பொற்றாளில் தொண்டுகொண்டேன்" என்றும் கீழே சொன்னதில் ஸ்வாமிக்கு அநங்யார்ஹராயிருப்பார் திருவடிகளே தமக்குப்பரம உத்தேச்யமென்கிறார். "ச்ருதி சிரஸிவிதீப்தே" என்றும் "உளன்சுடர் மிகுசுருதியுள்" என்றும் சொல்லுகிறபடியே, தாங்கள் அதிகரித்த வேதத்தின் உச்சியில் சுடர்ச்சோதியாய் ப்ரகாசிக்கிக்கிறவனை வகுத்த ஸ்வாமி என்று அறியகில்லாமல் கண்டவிடத்தில் தொண்டு பட்டுமன்று திரிகின்றவர்களுடைய அஜ்ஞானத்தைப் போக்கடித்த எம்பெருமானாரைத் தொழுகையே தமக்கு நிரூபகமாம்படியான பெருமையுடையவர்கள் திருவடிகள் தவிர என்னுத்மாவுக்கு வேறு புகலில்லை.

பற்று மனிசரைப்பற்றி அப்பற்றுவிடாதவரே
உற்றாரெனவுழன்று ஓடிநையேனினி *ஒள்ளியநூல்
கற்றார்பரவு மிராமாநுசனைக் கருதுமுள்ளம்
பெற்றார்யவர் *அவரெம்மைநின்றாளும் பெரியவரே. 86

"இராமாநுசனைத்தொழும் பெரியோர் பாதமல்லால் எந்தனுருயிர்க்கொன்றும் பற்றில்லை" என்றவர் இதற்கு முன்பு அப்ராப்தவிஷயங்களில் மண்டியிருப்பாரை பந்துக்களாக மதித்திருந்தமைக்கு வருந்தி இனி அது செய்பேன், எம்பெருமானாரை நெஞ்சிலே அநவரதமும் கொள்பவரே என்னையாள உரியவர் என்கிறார். சிறந்த சாஸ்த்ரஞானமுள்ள பெரியவர்களாலே கொண்டாடப்படுகிற உடையவரை எக்காலத்திலும் தம் திருவுள்ளத்திலே ப்ரேமத்துடன் வைத்துப்பூசிக்கு மஹாநுபாவர்களே என்னையாளும் பூஜ்யர்கள்.

பெரியவர்பேசிலும் பேதையர்பேசிலும் *தன்குணங்கட்கு
உரியசொல்லென்று முடையவனென்றென்று *உணர்வின்மிக்கோர்
தெரியும்வண்கீர்த்தி இராமாநுசன் மறைதேர்ந்துலகில்
புரியுநன்ஞானம் *பொருந்தாதவரைப்பொரும்கலியே. 87

சேதனருடைய ஞானவ்யவஸாயங்களை (அறிவு, உறுதி) க்குலைக்கும் கலிகாலத்திலே உமது உறுதி ஒருபடிப்பட நிற்குமோ? என்று கேட்டால், நிற்கும்; கலியின் ஆட்சிக்கு விஷயம் எம்பெருமானார் உபதேசங்களுக்குப்புறம்பானவர்களே என்கிறார். ஞானத்தில் குறைவில்லாத மஹான்கள் பேசினுலும், சிரிய ஞானத்தராகிய பேதையர் பேசினுலும்—"பேசுவார் எவ்வளவு பேசுவர், அவ்வளவே வாசமலர்த்துழாய் மாலையான் வடிவு" என்றாற்போல, கற்றுணர்ந்தவர் பேசினுலும், கல்லாத அற்பர் பேசினுலும் அவரவர் நிலைக்குத் தகுந்தபடி துதிக்கத்தகுந்தவர் ஸ்வாமி. அப்படி துதிக்கப்படும் எம்பெருமானார் உபதேசங்களை ஆதரியாவர்களே கலிதோஷத்தால் வருந்துவார்கள்.

கலிமிக்கசெந்நெல் கழனிக்குறையல் *கலைப்பெருமான்
ஒலிமிக்கபாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து *அதனுல்
வலிமிக்கசீயமிராமாநுசன் மறைவாதியராம்
புலிமிக்கதென்று *இப்புவனத்தில் வந்தமைபோற்றுவனே. 88

எம்பெருமானார் உபகரித்த ஞானத்தில் அந்வயமில்லாதாரை (உபதேசத்தால் திருந்தாதவரை) கலி நலியுமென்றார் கீழே. அந்த ஞானத்தை உபகரிக்கைக்காக அவர் வந்து அவதரித்தபடியை எண்ணி, அதைப் போற்றக்கடவேன் என்கிறார். நிலவளம் மிக்கதாய் செந்நெல்

அதிகமாய் விளையும் வயல்களையுடைத்தான திருக்குறையலூருக்கு நாயகனான கலியன் "ஒலி கெழுபாடல்" என்று த்வநி மிகுந்ததாயும் சாஸ்த்ரமே வடிவெடுத்ததாகவும் பாடின திவ்ய ப்ரபந்தங்களை நன்றாக அநுபவித்து அதனால் திருவுள்ளம் பூரித்து, ப்ரதிபக்ஷி மதங்களை நிரஸனம்பண்ணும் வலிமையுள்ள சிங்கமாய் நிற்கும் எம்பெருமானார் வேதங்களுக்குத் தவறான பொருள்களை கற்பிக்கும் துர்வாதிகளான புலிகள் இவ்வுலகில் மலிந்தன என்று அவைகளை கண்டிப்பதற்காக வந்து அவதரித்தமையைப் போற்றக்கடவேன்.

போற்றரும்சீலத்திராமாநுச! *நின்புகழ் தெரிந்து
சாற்றுவனேல் அதுதாழ்வுஅதுதீரில் *உன்சீர்தனக்கோ
ரேற்றமென்றே கொண்டிருக்கிலும் என்மனமேத்தியன்றி
ஆற்றகில்லாது *இதற்கென்னினைவாயென்றிட்டஞ்சுவனே. 89

"நாளுமென்புகழ்க்கோவுனசீலம்" என்னுமா போலே புகழ்ந்து தலைக்கட்ட வரிதான சீலகுணத்தையுடைய ஸ்வாமிந்! தேவரீருடைய கல்யாணகுணங்களை உணர்ந்து உலகமறியப் பேசவேணுகில், தாழ்ந்தவனான அடியேன் அப்படிச் செய்வதால் தேவரீருக்கு இழுக்காகா நிற்கும். அதை அடியேன் தவிர்ந்திருக்கையே தேவரீருக்கு ஏற்றமாகும்; இப்படி அறிந்திருக்க, தேவரீருடைய புகழைப் பேசாமல் அடியேனால் தரித்திருக்க இயலவில்லை. இவ்விஷயத்தில் தேவரீர் திருவுள்ளம் எப்படியோ என்று அஞ்சிநிற்கிறேன் என்கிறார்.

நினையார்பிறவியை நீக்கும்பிரானை *இந்நீணிலத்தில்
எனையாளவந்தவிராமாநுசனை *இருங்கவிகள்
புனையார் புனையும்பெரியவர்தாள்களில் பூந்தொடையல்
வனையார் *பிறப்பில்வருந்துவர் மாந்தர்மருள்சுரந்தே. 90

இவர் அஞ்சுவன் என்றவாறே ஸ்வாமியானவர் "அஞ்சற்க" என்று இவர்பயமெல்லாம் போம்படி குளிரக் கடாக்ஷிக்க, அதனால் பயமற்று, இவ்வுலகத்து மாந்தர் எம்பெருமானார் விஷயத்தில் ஏதாவது ஒரு நலம் செய்து வாழ்ந்து போகலாமாயிருக்க, ஞான சூன்யராயிருந்து வருந்துகின்றனரே என்று இன்னாதாகிறார்.

பிறவிக்கடலான ஸம்ஸாரத்தை ஒழிக்கும் மஹோபகாரகராய், இம்மாபெரும் பூமியில் அடியேனையாட்கொள்வதற்தே வந்து பிறந்த ஸ்வாமி எம்பெருமானாரை நினையாதவர்களாயும், அவர்விஷயமான பாடல்களைப் பாடாதவராயும், பாடும் பாக்யசாலிகளைப் பூசியாமலும் (அவர்கள் திருவடிகளில் பூவிட்டுப்பணியாத) மனிதர்கள் ஞானசூன்யர்களாய் ஸம்ஸார ஸாகரத்தில் கிடந்து துன்பப்படுகின்றனரே—அந்தோ! பரிதாபம்.

மருள்சுரந்து ஆகமவாதியர்கூறும் *அவப்பொருளாம்
இருள்சுரந்தெய்த்த வுலகிருள்நீங்க *தன்னீண்டியசீர்
அருள்சுரந்தெல்லாவுயிர்கட்கும்நாதன் அரங்கனென்னும்
பொருள்சுரந்தான் *எம்மிராமாநுசன் மிக்கபுண்ணியனே. 91

இப்படி தமக்கு அவ்வருகாயிள்ளவராயிருந்தும் இவர்கள் உஜ்ஜீவனார்த்தமாக எம்பெருமானார் செய்தருளின முயற்சிகளை எண்ணி அவரைக் கொண்டாடுகிறார். சைவாகமங்களைப் ரமாணமாகக் கொண்டு துர்வாதம் பண்ணும் பாசுபதர்கள் கூற்றைக்கேட்டு, அஜ்ஞானமே அதிகரிக்கப்பெற்று. அவர்கள் சொல்லும் கீழ்த்தரமான அர்த்தங்களாகிற இருள் மேலிட்டு அதனால் கெட்டுப்போன உலகத்தவர்களுடைய அகவிருள் போகும்படி தம்பரமக்ருபையைப் பெருக்கி, ஸகலப்ராணிகளுக்கும்ஸ்வாமி ஸ்ரீரங்கநாதனே என்னும் சீரிய பொருளை வெளியிட்டு வாழ்வித்த ஸ்வாமி சிறந்த மஹாத்மாவாவர். (மிக்க புண்ணியனான எம்மிராமாநுசன் பொருள் சுரந்தான் என்றும் அந்வயம் ஆகும்)

புண்ணியநோன்பு புரிந்துமிலேன் *அடிபோற்றிசெய்யும்
நுண்ணருங்கேள்வி நுவன்றுமிலேன் *செம்மைநூற்புலவர்க்
கெண்ணருங்கீர்த்தி யிராமாநுச! இன்றுநீ புகுந்தென்
கண்ணுள்ளும்நெஞ்சுள்ளும்* நின்றவிக்காரணம் கட்டுரையே. 92

சேதனர்கள் எம்பெருமானார் விஷயத்தில் சிறிதாவது அநுகூலப்பட்டு வாழ்ந்து போகலாமாயிருக்க, துக்கத்தையே அநுபவிக்கின்றனரே என்று வருந்தி, ஸ்வாமி இவர்களை வாழ்விக்க வென்று செய்யு முயற்சிகளைக் கொண்டாடினார் கீழிரண்டு பாசுரங்களில். இந்தப் பாசுரத்தில், நிர்ஹேதுகமாகத் தம்மை யங்கீகரிக்கைக்கும்; அங்கீகரித்து தமக்கு அகத்திலும் புறத்திலும் இருந்து வாழ்விக்கும் காரணத்தை அவரையே கேட்கிறார்.

"இப்படி என்னை தேவரீர் வாழ்விக்கும் படிக்கீடாக நான் செய்த நல்தவம் ஒன்றுமில்லை; தேவரீருடைய பொன்னடிகளைப் போற்றுகைக்குறுப்பான விஷயங்களைக் காதால் கேட்டது மில்லை; கேட்கவேணும் என்று வாய்வெருவவுமில்லை; இப்படியிருக்க, ஸ்வாமி அடியேன் கண்ணுக்கும் மனதுக்கும், விஷயமாகும்படி இருக்கும் காரணத்தை அருளிச்செய்யவேணும்."

கட்டப்பொருளைமறைப்பொருளென்று *கயவர்சொல்லும்
பெட்டைக்கெடுக்கும் பிரானல்லனே? *என்பெருவினையைக்
கிட்டிக்கிழங்கொடு தன்னருளென்னும் மொள்வாளுருவி
வெட்டிக்களைந்த *இராமாநுசனென்னும் மெய்த்தவனே. 93

"இக்காரணம் கட்டுரையே" என்ற கேள்விக்கு ஒன்றும் அருளிச்செய்யாமையாலே நிர்ஹேதுகமான அருள் என்று தெளிந்து அவ்வருளைப் போற்றுகிறார். அடியேன்பக்கல்வந்து கிட்டி, தம்முடைய க்ருபையாகிற தெளியக்கடைந்த வாளை தமது ஸங்கல்பமென்னும் உறை யிலிருந்து உருவி என்னுடைய (பலகாலம் சேர்த்து பெரியசுமையான) மஹாபாபங்களை, மீளவும் கிளராதபடி வாஸனையாகிற கிழங்குடன் கூட வெட்டிக்களைந்த ப்ரபந்நஜனகூடஸ்த [illegible] எம்பெருமானார், தவறான, கீழ்த்தரமான அர்த்தங்களை வேதத்தின் உண்மைப்பொருள் [illegible]ன்று சொல்லித்திரியும் குத்ருஷ்டிகளுடைய பிரட்டுப்பேச்சுகளை தாமாகவே கண்டித் தொழித்த பேருபகாரியன்றோ? என் பாபத்தைப் போக்கியது, குத்ருஷ்டி நிரஸனம் பண்ணி சேதனரைக்காத்தது இரண்டும் நிர்ஹேதுகமாகச் செய்தவை. அதுபோல் தான் என் மனதுள் புகுந்து வாழ்வித்ததும் என்றபடி.

தவம்தரும்செல்வும் தகவும்தரும் *சலியாப்பிறவிப்
பவம்தருந்தீவினைபாற்றித்தரும் *பரந்தாமமென்னும்
திவம்தரும் தீதிலிராமாநுசன் தன்னைச்சார்ந்தவர்கட்கு
உவந்தருந்தேன் *அவன்சீரன்றியானொன்றுமுள்மகிழ்ந்தே. 94

தம்மை நிர்ஹேதுகமாய் அங்கீகரித்துக் கர்மங்களைப் போக்கினபடியைக்கீழே சொல்லி, இங்கு, எம்பெருமானார் தம்மை ஆச்ரயித்தார்க்கு ப்ரபத்தி நிஷ்டை தொடங்கி பரமபதபர்யந் தம் கொடுத்தருளுவதால் அவர் கல்யாணகுணங்களன்றி வேறேதும் எனக்கு அநுபவ விஷய மாகாது என்கிறார். நல்தவமான ப்ரபத்திநிஷ்டையை தம்மை வந்தடைந்தவர்கட்கு எக்குற்றமுமற்றவரான ஸ்வாமி எம்பெருமானார் அநுக்ரஹிப்பர்; மேலே, புருஷார்த்தமான கைங்கர்யம் ருசிப்பதற்காக பக்தியாகிற செல்வத்தை யருள்வர்; ஸம்ஸாரத்தை மேலும் மேலும் தரும் தீவினைகளை, "பண்டைவல்வினை பாற்றியருளினன்" என்கிறபடி தூளியாகப்

பறந்து போம்படி பண்ணுவர்; அதற்கும் மேலே விண்ணுட்டையும் அளிப்பர். இப்படி எல்லாம் தந்தாலும் நான் மநதில் ப்ரேமத்துடன் விரும்பி அருந்துவது கல்யாணகுணங்களா கிற ரஸத்தையே.

உண்ணின்றுயிர்களுக்கு உற்றனவேசெய்து* அவர்க்குஉயவே
பண்ணும்பரனும் பரிவிலனும்படி* பல்லுயிர்க்கும்
விண்ணின்தலைநின்று வீடளிப்பான் எம்மிராமாநுசன்
மண்ணின்தலத்துதித்து *உய் மறைநாலும் வளர்த்தனனே. 95

எம்பெருமானர், தம்மை ஆச்ரயித்தவரை உஜ்ஜீவிக்கும்படியைச் சொன்னர் கீழ்; இவருடைய ஞானசக்திகளை அநுஸந்தித்து, இவர் நம்போலியரல்லர்; நித்யஸூரிகளில் ஒருவர் பரார்த்தமாக (பிறர் வாழவேணும் என்று) ஸம்ஸாரிகள் நடுவே வந்தவதரித்தாராகவேணும் என்கிறர். அந்தர்யாமியாய் ஸகலஜீவராசிகளிலும் உட்புகுந்து அந்தந்த ஆத்மா கடைத் தேறும் வழிகளை வகுத்துத்தரும் எம்பெருமானுடைய ப்ரீதியும் இவருடையதற்கு ஒப்பாகாது என்னலாம்படி நமக்கெல்லலாம் மோக்ஷஸாம்ராஜ்யத்தைக் கொடுப்பதற்காக விண்ணின் தலையான ஸ்ரீவைகுண்டத்தினின்றும் இந்த பூதலத்தில் வந்தவதரித்து, யாவரும் உஜ்ஜீவிக்கும் படி நான்கு வேதங்களையும் விளங்கச் செய்தருளினர் (உண்மைப்பொருளை விளங்கச்செய்தார்

வளரும்பிணிகொண்ட வல்வினையால் *மிக்கநல்வினையில்
கிளரும்துணிவு கிடைத்தறியாது *முடைத்தலையூன்
தளருமளவும் தரித்தும்விழுந்தும் தனிதிரிவேற்கு
உளரெம்மிறைவர் *இராமாநுசன்தன்னை யுற்றவரே. 96

"மறை நாலும் வளர்த்தனன்" என்றவரை, ஸ்வாமிதாம் சேதனர் வாழும்படி வேதாந் தங்களில் சொல்லப்பட்ட பக்தி ப்ரபத்தி இரண்டையும் அருளிச் செய்ததில் உமக்கு எது அபிமதம்? என்ன, அநாதியான பாபம் தடையாகவுள்ளதால் என் நெஞ்சில் பக்தி பிறக்க வில்லை; ப்ரபத்திக்கு வேண்டிய ஸித்ததர்மமான அவன் நம்மை வாழ்விப்பான் என்ற திடமான நம்பிக்கை (மஹாவிச்வாஸம்) என்னிடமில்லை. இதனுல் ஸம்ஸாரத்தில் ஒருவாறு தரித்திருந் தும், விஷயஸுகங்களில் விழுந்தும் அலையும் நான் எம்பெருமானரை விட்டு தேவுமற்றறியேன் என்று பற்றியிருக்குமவர்களின் அபிமானத்திலே ஒதுங்கி அதுவே வாழ்விக்கும் என்று உள்ளேன் என்கிறர். மிக்கநல்வினை—ப்ரபத்தி, கிளரும் துணிவு—மஹாவிச்வாஸம்.

தன்னையுற்றுட்செய்யும் தன்மையினேர் *மன்னுதாமரைத்தாள்
தன்னையுற்றுட்செய்ய என்னையுற்றுனின்று *தன்தகவால்
தன்னையுற்றாரன்றித்தன்மையுற்றாரில்லை யென்றறிந்து
தன்னையுற்றாரை *இராமாநுசன்குணம் சாற்றிடுமே. 97

இப்படி எம்பெருமானர் தம்மளவன்றிக்கே, அங்குத்தைக்கு அநர்ஹராயிருப்பார் உத்தேச்யரென்றிருக்கை என்ற நிலையும் ஸ்வாமி க்ருபையாலே வந்ததென்கிறர். தம்மைப் பற்றி இருப்பார் உண்டாகிலும், தம்படியாரைப்போற்றும் தன்மையர் யாருமில்லை என்று திருவுள்ளம் பற்றி இன்று, தன்னை ஆச்ரயித்து அடிமை செய்யும் இயல்புள்ளவர்களுடைய இணைந்த திருவடித்தாமரைகளிலே நான் ஆட்செய்யும்படி எம்பெருமானர் தம்பரம க்ருபை யால் வாழ்வித்தருளினர்.

**இடுமே இனியசுவர்க்கத்தில் *இன்னும்நரகிலிட்டுச்
சுடுமே அவற்றைத்தொடர்தருதொல்லை *சுழல்பிறப்பில்
நடுமேஇனிநம்மிராமாநுசன் நம்மைநம்வசத்தே
விடுமே சரணமென்றல் *மனமே! நையல் மேவுதற்கே. 98

இப்படி எம்பெருமானார் செய்தருளின உபகாரத்தைப் பேசினவாறே இவர் திருவுள்ளமானது, "நம்கர்மாவைப் பார்த்தன்றோ எம்பெருமான் ஸ்வர்க்கிலோ நரகத்திலோ நம்மையிடுகிறான்? ஸம்ஸாரத்திலுள்ளவரை துர்வாஸனை மேலிட்டு விபரீத நடத்தைகளில் செல்ல இடமுண்டே அப்படியானால் செய்வதென்?" என்று வருத்தப்பட, எம்பெருமானார் திருவடிகளே சரணம் என்று சொன்னவரை அவர் விட்டுக்கொடாராகையால் பேறு பற்றிய கலக்கம் வேண்டா என்று ஸமாதானம் சொல்லுகிறார்.

தற்கச்சமணரும் சாக்கியப்பேய்களும் *தாழ்சடையோன்
சொற்கற்றசோம்பரும் சூனியவாதரும் *நான்மறையும்
நிற்கக்குறும்புசெய் நீசரும்மாண்டனர் நீணிலத்தே
பொற்கற்பகம் *எம்மிராமாநுசமுனி போந்தபின்னே. 99

மனமே! நையல்—நீகரைய வேண்டா என்றார்; ஆயினும், ஞான வ்யவஸாயங்களைக் கெடுக்கும் பாஹ்யகுத்ருஷ்டிகள் மலிந்த நாடாயுள்ளதே! என்ன, எம்பெருமானாரவதரித்தபின்பு அவர்கள் மாண்டொழிந்தனர்; அஞ்சவேண்டா என்கிறார். தர்க்க ஸாமர்த்யம் கொண்டு மதஸ்தாபனம் பண்ணும் சமணரும், அவர்களுடன் தோள் தீண்டிகளான சாக்கியரும் (பௌத்தர்), தன்னை லோகம் போற்றவேண்டும் என்று ஜடைதரித்து ஸாதநாநுஷ்டானம் பண்ணித்திரியும் சிவன் கற்பித்த சைவாகமத்தைப் பின்பற்றும் தாமஸரான சைவரும், ப்ரமாணம் (வேதம் முதலியவை), ப்ரமேயம் (அவற்றில் சொல்லப்பட்ட தெய்வம்), ப்ரமாதா (அவற்றின் பொருளை உண்மையாக அறிந்து சொல்பவர்) இவை மூன்றையும் இல்லை செய்து சூன்யவாதம் பேசும் மாத்யமிகரும், வேதங்களை ப்ரமாணமாக் கொண்டு அதற்குத்தவறான அர்த்தங்களைக் கல்பித்து உலகத்தை வஞ்சிக்கும் குத்ருஷ்டிகளும் அழகிய கல்பக வ்ருக்ஷம் போல் பரம உதாரராய் விளங்கும் எம்பெருமானார் இவ்வுலகில் அவதரித்ததும் மாண்டுபோயினர். ஸ்வாமியிடைய ஸ்ரீஸூக்திகளினால் அவர்கள் மதங்கள் நஷ்டங்களாயின என்றபடி.

போந்ததென்னெஞ்சென்னும் பொன்வண்டு *உனதடிப்போதிலொண்சீ
ராந்தெளிதேனுண்டு அமர்ந்திடவேண்டி *நின்பாலதுவே,
ஈந்திடவேண்டுமிராமாநுச! இதுவன்றி ஒன்றும்,
மாந்தகில்லாது *இனிமற்றொன்றுகாட்டிமயக்கிடலே. 100

இப்படித் தம் திருவுள்ளத்துக்கு உபதேசம் பண்ண, அதுவும் எம்பெருமானார் திருவடிகளில் படிகிறபடியைக்கண்டு அதனுடைய ஸ்வபாவத்தை ஸ்வாமியிடம் விண்ணப்பித்து, திருவடிகளையே நல்கவேண்டும்—வேறுகாட்டி மயங்கப்பண்ண வேண்டா என்று ப்ரார்த்திக்கிறார். "ஸ்வாமிந்! அழகிய வண்டு போன்ற என் நெஞ்சம் தேவரீருடைய திருவடித்தாமரைகளில் கல்யாணகுணங்களாகிற தேனைப் பருகிக்களித்து அங்கேயே நித்யவாஸம் பண்ணுவதாய் வந்தது. அது வேண்டிவந்ததைத் தரவேணும். வேறு எதைக்கொடுத்தாலும் ரஸிக்க மாட்டாது. வேறொன்றையும் காட்டி மயக்கமுறச் செய்யவேண்டா. ஸம்ஸாரத்திலே போகாமல் திருவடிகளிலேயே நிலைபெறச் செய்யவேணும்."

மயக்குமிருவினை வல்லியில்பூண்டு *மதிமயங்கித்
துயக்கும்பிறவியில் தோன்றியவென்னை *துயரகற்றி
உயக்கொண்டுநல்குமிராமாநுச! என்றதுன்னையுன்னி
நயக்குமவர்க்கு இதிழுக்கென்பர் *நல்லவரென்றுநைந்தே. 101

இப்படி எம்பெருமானாருடைய போக்யதையிலே நெஞ்சுவைத்தவாறே முன்பு தாம் பண்ணிய பாவநத்வா நுஸந்தானம் (பாபத்தைப்போக்கிக் குற்றமற்றவராக்குகையைப் பேசுகை) தவருகத் தோற்றவே, போக்யதையைப் பேசாமல் பாவநத்வத்தைப்பேசியது தவறு என்கிறார். ஸ்வாமிந்! (தேவரீருடைய திருமேனி ஸௌந்தர்யத்திலும் கருணை முதலிய கல்யாணகுணங்களிலும் ஈர்க்கப்பட்டு) தேவரீரையே சிந்தைக்கு விஷயமாக்கி கைங்கர்யம் செய்யும் மஹாத்மாக்கள், அடியேன் "அறிவுகேட்டை விளைவிக்குமதாய், புண்ய பாபரூபத்தாலே இருவகைப்பட்டுள்ள கர்மமாகிற கயிற்றால் கட்டுண்டு, புத்திக்கும் மனதுக்கும் கலக்கம் உண்டாக்கும் ஸம்ஸாரத்திலே பிறந்த என்னை கர்மபலனான துக்கங்களைப் போக்கி உய்விக்கும் நாதனே" என்று தேவரீருடைய பாவநத்வத்தைப் பேசியது இழுக்கு என்பர். பாவநத்வத்தைப் பற்றி புகழ்வதிலும் போக்யதையைப் புகழ்வதே அடுக்கும்.

நையும்மனமுன்குணங்களையுன்னி *என்நாவிருந்துஎம்
ஐயனிராமாநுசனென்றழைக்கும் *அருவினையேன்
கையும்தொழும் கண்கருதிடும் காணக்கடல்புடைசூழ்
வையமிதனில் *உன்வண்மை என்பாலென்வளர்ந்ததுவே? 102

இப்படி பாவநத்வா நுஸந்தானமும் அஸஹ்யமாம்படி பரமபோக்ய பூதரான எம்பெருமானார் விஷயத்தில் தம்முடைய உட்புலன்களோடு வெளிப்புலன்களோடு வாசியின்றி அன்பு விஞ்சியிருக்கையைச் சொல்லி இந்த பூமிப் பரப்பெல்லாமிருக்க, தேவரீருடைய ஔதார்யம் என்பக்கல் பாய்வதற்குக் காரணம் யாதோ? என்று கேட்கிறார். அடியேனுடைய மனது ஸ்வாமியினுடைய கல்யாணகுணங்களை எண்ணியெண்ணி நைகிறது. என்நாவானது தேவரீருடைய நிருபாதிக பந்துத்வத்தையும் (எல்லாவிதமான உறவுமையும்) திருநாமங்களையும் சொல்லிக் கூப்பிடா நின்றது. அநாதிகாலம் தகாத விஷயங்களை நமஸ்கரித்துப் போந்த என் கைகள்தேவரீருக்கு அஞ்சலி பண்ணுவதில் ஆழ்ந்தன. கண்ணும் இமைக்காமல் தேவரீரையே பார்த்துக்கொண்டிக்க ஆசையுற்றது. கடல் சூழ்ந்த இவ்வுலகின் பரப்பில் கோடிக் கணக்கில் பலர் இருக்க தேவரீருடைய ஔதார்யம் என்மீது பெருகியது என்ன காரணம் கொண்டு?

வளர்ந்தவெங்கோப மடங்கலொன்றாய் *அன்றுவாளவுணன்
கிளர்ந்தபொன்னாகம் கிழித்தவன் *கீர்த்திப்பயிரெழுந்து
விளைந்திடும்சிந்தை இராமாநுசனென்தன் மெய்வினைநோய்
களைந்து நன்ஞானமளித்தனன் *கையில்கனியென்னவே. 103

இப்படி எல்லா கரணங்களும் தம் பக்கலிலே ப்ரவணமாகைக் குறுப்பாக எம்பெருமானார் தம்முடைய ஔதார்யத்தாலே தமக்கு உபகரித்த அம்சம், தம் கர்மத்தைக் கழித்து அழகிய ஞானத்தை விசதமாகத் தந்தருளியதே என்கிறார். அன்றொருகால் பெருங்கோபம் மேலிடப்பெற்று நரசிங்கமூர்த்தியாக உருவெடுத்து வாளேந்திய இரணியனது செருக்கினால் நெறித்திழிந்த மார்பைப்பிளந்த எம்பெருமானுடைய புகழ் என்னும் பயிர் வளர்ந்து ஓங்கும் திருவுள்ளத்தையுடைய எம்பெருமானார் என் உடலைப் பற்றியுள்ள கர்மவினையெல்லாம் ஒழித்து, உயர்ந்த ஞானத்தை கையில் கனிபோல் தந்தருளினன்.

கையில்கனியென்னக் கண்ணனைக்காட்டித்தரினும் *உன்தன்
மெய்யில்பிறங்கியசீரன்றி வேண்டிலன்யான் *நிரயத்
தொய்யில்கிடக்கிலும் சோதிவிண்சேரிலும்இவ்வருள்நீ
செய்யில்தரிப்பன் *இராமாநுசா! என்செழுங்கொண்டலே! 104

பகவத்விஷயம் கைபுகுந்தாலும், எம்பெருமானார் திருமேனியில் விளங்கும் ஸௌந்தர்யம் முதலான குணங்களை யொழிய வேறு எதுவும் வேண்டேன் என்கிறார். அழகிய மேகம் போன்று பரம உதாரராய் ப்ரகாசிக்கும் ஸ்வாமிந்! அடியவர்க்கெளியனான ஸர்வேச்வரனை உள்ளங்கை நெல்லிக்கனி போல் காட்டித் தந்தாலும் தேவரீருடைய திவ்ய விக்ரஹத்தில் ப்ரகாசிக்கிற எழில் போன்ற குணங்களையன்றி வேண்டேன். ஸம்ஸாரமாகிற கடலில் அமிழ்ந்திருந்தாலும், அதிசய ஒளியுடன் விளங்கும் பரமபதத்தை அடைந்தாலும், தேவரீருடைய திருமேனி குணத்தையே அநுபவித்து இன்புறும்படி அருள்புரிந்தாலல்லது அடியேனுக்கு தரிப்பு ஏற்படாது.

செழுந்திரைப்பாற்கடல் கண்துயில்மாயன் *திருவடிக்கீழ்
விழுந்திருப்பார்நெஞ்சில் மேவுநன்ஞானி *நல்வேதியர்கள்
தொழுந்திருப்பாதனிராமாநுசனைத் தொழும்பெரியோர்
எழுந்திரைத்தாடுமிடம்* அடியேனுக்கிருப்பிடமே. 105

யாரும் ஸம்ஸாரம் த்யாஜ்யம் (விடத்தக்கது), பரமபதம் உபாதேயம் (விரும்பத்தக்கது) என்பர்; நீரோ இரண்டையும் ஒரு படியாகச் சொல்லி நின்றீர்; உமக்கு இருக்கத்தக்க இடமாக நீர் அறுதியிட்டிருப்பது என்ன என்று சிலர் கேட்டாராக, பதில் சொல்லுகிறார். அழகிய அலைகள் படியும் திருபாற்கடலில் அவ்வலைகள் கால்வருடப் பள்ளி கொண்டுள்ள ஸர்வேச்வரன் குணங்களில் ஈடுபட்டு, ''ஜிதந்தே'' என்று சொல்லி அவன்காலிலே எக்காலமும் கலக்கமற்று விழுந்திருப்பவர்களும் தம் நெஞ்சில் எம்பெருமானாருடைய ஞான வைராக்ய குணங்களைப் போற்றுவர். அப்படிப்பட்ட எம்பெருமானாரை ஆச்ரயித்த மஹான்கள் ஸ்வாமி திருவடிகளைத் தொழுது அதனால் வந்த பெருமகிழ்ச்சியால் இருந்த இடத்தில் இல்லாமல் ஆடியும் பெருங்குரலில் பாடியும் போதுபோக்கும் இடம் எனக்கு இருப்பிடமாகும்.

**இருப்பிடம்வைகுந்தம்வேங்கடம் *மாலிருஞ்சோலையென்னும்
பொருப்பிடம் மாயனுக்கென்பர்நல்லோர் *அவைதன்னொடும்வந்
திருப்பிடம்மாயனிராமாநுசன் மனத்துஇன்றவன்வந்
திருப்பிடம் *என்தனிதயத்துள்ளே தனக்கின்புறவே. 106

இப்படி இவர்க்குத் தம்பக்கலுண்டான அதிமாத்ரப்ராவண்யத்தைக்கண்டு எம்பெருமானார் உகந்தருள, அத்தைக்கண்டு ப்ரீதராய் அருளிச் செய்கிறார். ஸ்வரூபம், ரூபம், குணம், விபூதி இவைகளால் ஆச்சர்யமான பெருமையுடைய ஸர்வேச்வரன் உகந்து வர்த்திக்கும் இடங்கள் ஸ்ரீவைகுண்டம், திருவேங்கடமலை, திருமாலிருஞ்சோலை மலை என்று சொல்வர்கள் நல்லவரான பெரியோர்கள். அப்படிப்பட்ட எம்பெருமான் அந்த உகந்தருளின இடங்களுடன் கூட எழுந்தருளியிருப்பது என் ஸ்வாமி எம்பெருமானார் திருவுள்ளத்திலே. இப்போது அந்த ஸ்வாமியும் ஆநந்தமாக எழுந்தருளியுள்ளது அடியேன் இதயத்துள்ளேயாகும்.

**இன்புற்ற சீலத்திராமாநுசா! *என்றுமெவ்விடத்தும்
என்புற்றநோயுடல்தோறும் பிறந்திறந்து *எண்ணரிய
துன்புற்றுவீயினும் சொல்லுவதொன்றுண்டு உன்தொண்டர்கட்கே
அன்புற்றிருக்கும்படி என்னையாக்கிஅங்காட்படுத்தே. 107

இப்படி எழுந்தருளியுள்ள எம்பெருமானாரை நேரே நோக்கித் தமக்கு வேண்டியவற்றை விண்ணப்பம் பண்ணுகிறார். மிகவும் தாழ்ந்தவனேயாகிலும் என் இதயத்துள்ளே புகுந்து அது தன்னைப் பெரும்பேறாக எண்ணி ஆநந்தமாக எழுந்தருளியுள்ள ஸௌசீல்யம் படைத்த ஸ்வாமின்! தேவரீரிடம் விண்ணப்பிப்பது ஒன்றுண்டு. அதேதென்னில்; தோற்புரையே போமதன்றியிலே அஸ்திகத்மாய் நின்று நலியக்கடவ (எலும்பிலே ஊறிக்கஷ்டம் விளைவிக்கக் கூடிய) நோய்களுக்கு இருப்பிடமான உடல்கள் கொண்டு பிறப்பதும் இறப்பதுமாய் எண்ணற்ற துன்பங்களை அநுபவித்து முடிந்து போனாலும், இன்றும், நாளையும், என்றும் தேவரீருக்கன்றி யாருக்குமாட்படாது தேவரீருடைய அடியார்கள் திறத்தே மாறாத அன்புடையவனாய் அவர்கள் திருவடிகளில் கைங்கர்யம் பண்ணுபவனாக க்ருபை செய்தருள வேண்டும். இதுவே அடியேன் வேண்டுவது.

**அங்கயல்பாய்வயல் தென்னரங்கன்*அணியாகமன்னும்
பங்கயமாமலர்ப்பாவையைப் போற்றுதும் *பத்தியெல்லாம்
தங்கியதென்னத்தழைத்துநெஞ்சே! நந்தலைமிசையே
பொங்கியகீர்த்தி *இராமாநுசனடிப்பூமன்னவே. 108

நிகமத்தில் (முடிக்கும்போது) ''இராமாநுசன் சரணாரவிந்தம் நாம் மன்னிவாழ'' என்ற ப்ராப்யம் கைபுகுருகையும், அந்தப்ராப்யத்திலே நிலையான பூர்ண பக்தியும் இவருக்கு வேண்டுவன ஆகையாலே ''தேனமரும் பூமேல் திரு—நமக்கென்றும் சார்வு'' என்கிறபடியே யாவருக்கும் சார்வாய் அமைந்துள் பெரிய பிராட்டி யாரை ஆச்ரயிப்போம் என்கிறார். நெஞ்சே! பக்தி தத்வமானது மீதமில்லாமல் இவரிடமே குடிகொண்டுள்ளது என்று சொல்லும் படி பூர்ணராய் எங்கும்பரந்த புகழுடைய எம்பெருமானாருடைய திருவடித்தாமரைகள் என் சென்னிக்கு மலர்ந்த பூவே என்னும்படி எப்போதும் நம் தலையில் நித்யவாஸம் பண்ணுகைக் குறுப்பாக (நாம் செய்ய அடுப்பது இது) அழகிய வயல்கள் சூழ்ந்த திருவரங்கத்தில் உறையும் பெரிய பெருமாளுடைய திருமார்பில் இறையும் அகலகில்லேன் என்று நித்யவாஸம் பண்ணும் மலர்மகளான ஸ்ரீரங்கநாச்சியாரை (ஸ்ரீமஹாலக்ஷ்மியை) ஆச்ரயிப்போமாக.

முதல்பாசுரமும் ஈற்றுப்பாசுரமும் ஒரே முறையில் அமைந்துள்ளன. அங்கே 'பூமன்னுமாது'; இங்கே 'பங்கயமாமலர்ப்பாவை'; அங்கே ''பொருந்திய'' மார்பன்; இங்கே 'அணியாக மன்னும்'; அங்கே இராமாநுசன் சரணாரவிந்தம் நாம்மன்னிவாழ'; இங்கே 'தலைமிசையே இராமாநுசனடிப்பூமன்ன'; அங்கேயும் 'நெஞ்சே' என்று தொடங்கி இங்கேயும் நெஞ்சே' என்றுதிருவுள்ளத்தோடே கூடத்தலைக்கட்டுகிறார். இதனால் ப்ராப்யம் (அடைய வேண்யது) ஆசார்யசரணாரவிந்தம் என்றும் அதில் ஆத்மாவுள்ளவரை பிரியாவடிமை செய் திருக்கை யென்றும், இந்தப்ராப்யத்தில் ருசி வளருகைக்கும் அதை அடைவதற்கும் ப்ரார்த் திக்கவேண்டியது ஸகல ஸம்பத்தையுமருளும் பெரிய பிராட்டியாரையே என்றாராயிற்று.

எம்பெருமானார் திருவடிகளே சரணம்
திருவரங்கத்தமுதனார் திருவடிகளே சரணம்
பெரிய ஜீயர் திருவடிகளே சரணம்

——o——